# ஹிந்து தர்மம்

மகாத்மா காந்தி உபதேசங்கள்



"சுதந்திரச் சங்கு" காரியாலயம்
திருவல்லிக்கேணி, சென்னை.
1933



காந்தி புத்தகசாலை
70, ஜெ. மூகல் ரோட், இரங்கோன்.

## யார் வைஷ்ணவன்?

(மகாத்மாவுக்கு மிக்க பிரியமான கீதமாகிய 'வைஷ்ணவ ஜனதோ' என்ற பாட்டின் மொழி பெயர்ப்பு. மொழிபெயர்த்தவர் சங்கு ஸுப்ரஹ்மணியன்.)

சொல்லுவம் வைஷ்ணவன் யாரெனக் கேளீர்
  சோர்ந்தவர் பீடையை அறிவானே
எல்லோர் தம் துக்கத்தை எரிப்பவனுயினும்,
  எள்ளளவும் கர்வம் அடையானே. சொ

மன்னுயிர் மக்களை வந்தித்து நிற்பான்
  மாசுறு நிந்தனை மொழியானே
சொல் மன முடலதில் சுத்தமதானவன்
  சோதியுற்றுள் பெற்ற தாய்மாரே. சொ.

பாவப் பேராசை யற்று பார்வை சமத்துவ முற்று
  பரஸ்திரீயைத் தாயெனப் பணிவானே
நாவினுல் பொய் மொழி நவிலவும் மாட்டான்
  நாளும் பிறர் செல்வம் தீண்டானே சொ.

மாயையும் மோகமும் மாயும் அவன்பால்
  மனத்தில் வைராக்கிய முறுவானே
ஓயாமல் ராமனை உள்ளம் நினைந்திட
  உண்டு புண்ணியப் புனல் உடலதிலே சொ.

காமமும் லோபமும் கபடமும் கோபமும்
  கனவிலு மில்லாத கனவானே
பாமரர் பார்த்திட பற்பல தலைமுறை
  பாவனம் அடைந்திடச் செய்வானே. சொ.

# கடவுள்

உலகிலுள்ள ஒவ்வொன்றையும் ஓர் சூக்ஷ்ம சக்தி இயக்கிக் கொண்டிருக்கிறது. அதை நான் உணர்கின்றேன். ஆனால் அதைப் பார்த்ததில்லை. இந்த பார்க்கொணாத சக்தியை எதிர்ப்பது கூடாத காரியம். அக்காரணத்தைக் கொண்டே 'கடவுள்' என்று ஒருவர் இருக்கிறாரென நான் கூறுகின்றேன்.

சாதாரணமாய் உலகத்தில் யார் அரசன், யார் ஆளுகின்றான் என்பது பாமரர்களுக்குத் தெரியாது. ஆயினும் ஒருவர் ஆண்டுகொண்டு தானிருக்கிறார். அதே மாதிரி நமக்குத் தெரியாமல் அகிலாண்டத்தையும் ஆள்கின்றார் பகவான்.

சில வருடங்களுக்கு முன்னே நான் மைசூரில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது அநேக கிராமவாசிகளைச் சந்தித்தேன். மைசூரை யார் ஆண்டு வருகிறாரென்பது அப்பாமர மக்களில் அநேகருக்குத் தெரியாது. 'கடவுள் ஆளுகின்றார்' என்று சிலர் சொன்னார்கள். கடவுளின் எதிரே நான் அணுவினும் கேவலமானவன். அரசருக்கெல்லாம் அரசரான அவரது அருள் எளிதில் கிடைக்குமா? ஆனால் அந்த மைசூர் பிரஜைகள் தங்கள் ராஜ்யத்தைப் பற்றி உணர்வதைப் போலவே, நானும் பரமனின் ராஜ்யத்தைப் பற்றி உணர்கின்றேன். அண்டாண்டமெங்கும் ஓர் ஒழுங்காயுளது; மாற்ற முடியாத வண்ணம் ஒவ்வொரு வஸ்துவுக்கும் ஒவ்வொரு தொழில் உளது. எல்லாவற்றையும் அடக்கி யாளும் அந்த சித் சக்தியே 'ஆண்டவன்.'

குருட்டுச் சட்டத்தைப் போட்டு உலகை யாள முடியாது. இப்போது ஜடப் பொருள்களிலும் உயிருளது என திரு. ஜே. ஸி. போஸ் நிரூபித்து வருகிறார். இவ்வளவு உயிர்களையும் எது இயங்குவிக்கிறதோ அச்சக்திதான் 'பரமாத்மா.'

அவரும், அவரது சட்டமும் ஒன்றே. எனக்கு அவரைப் பற்றியோ, அவரது சட்டத்தைப் பற்றியோ ஒன்றும் தெரியாது. ஆதலால் நான் அவரை மறுக்க விரும்புவதில்லை. உலகில் எவ்வளவோ விதமான சக்திகள் உள். அவைகளை மறுப்பதனால் எனக்கேதாவது பலனுண்டோ? அவ்வாறே கடவுளின் சக்தியை எதிர்ப்பதாலும் பயனில்லை. ஆனால் அவரது கட்டளைகட்குக் கீழ்ப்படிந்தால் வெகு சுலபமாக நமது ஆயுட்காலத்தைக் கழிக்கலாம் என்பது நிச்சயம். என்னைச் சுற்றிலும் உள்ளவை மாறிக்கொண்டே வருவதையும், சில மாண்டு வருவதையும், நான் காண்கின்றேன். ஆனால் இவைகளுக் கிடையே யிருந்தும் மாறுத, சாகாத ஓர் சக்தி உலகை ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது. அதுதான் உலகை சிருஷ்டிப்பது; அழிப்பது; மறுபடியும் தோற்றுவிப்பது; அந்தச் சக்திதான் பரமாத்மா. வேறொன்றும் அதற்கிணையாக இல்லை. யாதலால் எனது புலன்களை அந்த சக்தியிடம் சமர்ப்பணம் செய்கிறேன்.

இந்த சக்தி அருள் மயமானதா? துவேஷ முடையதா? இது முற்றிலும் அருள் மயமானதாக நான் காண்கின்றேன். ஏனெனில் உலகில், சாவின் மத்தியில் வாழ்வு பொங்குகின்றது. அசத்தியத்தின் இடையே சத்தியம் நிலவுகின்றது. இருளின் இடையே ஒளி உறைகின்றது. அக்காரணங்களால் கடவுள்தான் அந்தராத்மா; அவர்தான் சத்தியம்; அவர்தான் ஒளி என்று நான் தேர்கின்றேன். அவர் ப்ரேமஸ்வரூபி; அவர்தான் பூரண சுத்தமானவர்.

கேவலம் அறிவுக்கு மட்டும் இன்பமூட்டுவதுதானா கடவுள்? இல்லை. கடவுள் என்றால் அவர் இதயத்தை மாற்றும் வல்லமையோடிருக்க வேண்டும். தன் பக்தர்களின் சின்னஞ் சிறிய வேலைகளிலும் அவர் தோன்ற வேண்டும். இத்தகைய அத்யாத்மிகத் தோற்றம் ஐம்புலன்களுக்கும் அப்பாலுள்ளது. ஐம்புலன்கள் எப்போதும் ஏமாற்றும் இயல்புடையன. ஆனால் புலன்களுக்குப் புறத்தே பெறும் உணர்ச்சி அழிக்கொணுதது. ஆண்டவனின் தரிசனத்தை அடைந்தவர்கள் அத்தகைய உணர்ச்சி பெற்றவர்கள்.

ஒவ்வொரு தேசத்திலும் இத்தகைய மகான்கள் தொடர்ந்தாற்போல, தோன்றி வருகின்றனர். இந்த சத்தியத்தை மறுப்பது தன்னையே எதிர்ப்பதுபோலாகும். இத்தகைய உணர்ச்சி பெறுதற்கு முன் தளராத நம்பிக்கை அத்யாவசியமானது. தன்னோடு ஆண்டவன் இருப்பதாக எண்ணுகின்றவன் உறுதியான நம்பிக்கையோடு வாழவேண்டும். நம்பிக்கை கொண்டு வாழ்வது சுலபமான வழியாகும். இந்த உலகத்தில் நற்குணமே ஆள்வதாக நம்பவேண்டும். அதாவது 'ஸத்தியமேவ ஜயதி,' 'அன்பே ஆண்டவன்' என்றவைகளில் பூரண நம்பிக்கை கொள்ளவேண்டும். இதற்கு எதிரிடையாய்த் தோன்றுபவைகளை மறந்து விட வேண்டும்.

காரணங்களைக் கூறிக் காரியத்தை விளக்க யான் அறியேன். ஏனெனில் காரணங்களைக் கடந்தது 'நம்பிக்கை'. அதேபோல உலகில் ஏன் அக்ரமம் இருக்கின்றது என்பதை விளக்க யானறியேன். கடவுள் உலகில் தீமையைப் புகுத்திவிட்டு அவரும் பொறுமையாக சகித்துக்கொண்டிருக்கிறார் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அவரிடம் துளியேனும் தீமை கிடையாது. தீமையைப் புகுத்தியவர் அவரேயாயினும் அவரைத் தீமை அணுகாது. தீமையை எதிர்த்துப் போர் புரியாவிட்டால் கடவுளை நான் அறியவே முடியாது. என்னுடைய குறைந்த அனுபவத்தினின்றே இதை நான் திண்ணமாகக் கூறுவேன். நான் சுத்தமாகப் பாடுபடப் பட அவருடைய அருகில் செல்கின்றேன். என்றைய தினம் எனது நம்பிக்கை ஹிமாலயத்தைப்போன்று அசையாமலும், பனிச் சிகரங்களைப் போன்று சுத்தமாகவும் ஆகின்றதோ அன்று ஆண்டவனை முற்றிலும் உணர்வேனென்பதும் நிச்சயம்.

---

# ஹிந்து தர்மம்

நானும் ஓர் 'ஸநாதன ஹிந்து' என்று உரிமை பாராட்டி வருகின்றேன். ஆயினும் ஹிந்து மதத்தின் பெயரால் நடக்கும் சில வழக்கங்களை நான் ஏற்றுக்கொள்வதில்லை. ஆதலால் எனது ஸநாதன ஹிந்து மதம் எது என்பதை விளக்க வேண்டுமல்லவா? 'ஸநாதனம்' என்ற வார்த்தைக்கு அதன் இயற்கை அர்த்தத்தையே கொடுப்பவனாதலாலும் அடியிற் கண்ட காரணங்களாலும் என்னை ஸநாதன ஹிந்து என அழைத்துக் கொள்கின்றேன்.

(1) வேதங்கள், உபநிஷதங்கள், புராணங்கள், முதலிய ஹிந்து தர்ம சாஸ்திரங்களிலும், ஆகவே பகவானின் அவதாரங்களிலும் மனிதனின் மறு பிறப்பிலும் எனக்கு நம்பிக்கை யுண்டு.

(2) வேத காலத்திலிருந்த பண்டைய வருணாசிரம தர்மத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. தற்காலத்தில் அர்த்தமற்ற முறையில் அனுஷ்டிக்கப்படும் 'வர்ணாசிரம தர்மம்' எனது தர்மமல்ல என்பதையும் குறிப்பிட விரும்புகின்றேன்.

(3) கோ சம்ரக்ஷணையில் எனக்கு நம்பிக்கையுண்டு. சாதாரணமாக ஜனங்கள் இவ்விஷயத்தில் கொண்டுள்ள எண்ணத்தைவிட விசாலமான கருத்துடையவன் யான்.

(4) விக்ரஹ ஆராதனையில் நான் அவநம்பிக்கை கொண்டவனல்ல.

வேதங்கள் முதலியவற்றைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'அவை தெய்வத்தினிடமிருந்து தோன்றியவை' என்ற பதங்களை நான் உபயோகிக்கவில்லை. ஏனெனில் வேதங்களுக்கு

மட்டும் தனித்து ஈசுவரத்தன்மை உண்டு என்று நான் கருது வதில்லை. வேதங்களுக்கு எவ்வளவு ஈசுவரத் தன்மை புண்டோ அவ்வளவு ஈசுவரத் தன்மை கிறிஸ்துவ வேதமாகிய பைபிளுக்கும், முகம்மதியர் வேதமாகிய குர் ஆனுக்கும், பாரஸிகரின் வேதமாகிய 'ஜெண்டவஸ்தா'விக்கும் உண்டு என்று யான் கருதுகின்றவன். ஹிந்து தர்ம சாஸ்திரங்களில் எனக்கு பூர்ண நம்பிக்கை யுள்ளபோதிலும், அவற்றில் 'ஒவ்வொரு பதமும் தெய்வீகமானவை' என்று எண்ண வேண்டுவதில்லையல்லவா? அந்தப் புனித கிரந்தங்களை முழுதும் ஆராய்ச்சி செய்தவனென என்னை நான் கூறிக் கொள்ளவில்லை. ஆயினும் அந்த கிரந்தங்களின் உண்மைகளையும் முக்ய உபதேசங்களையும் உணர்ந்தவனென உரிமை கொண்டாடுகின்றேன். அந்தக் கிரந்தங்களின் வாக்யங்களுக்கு ஏதேதோ விதம் விதமாக பண்டிதர்கள் அர்த்தம் சொல்லலாம். அந்த அர்த்தங்களெல்லாம் என்னைக் கட்டுப்படுத்தா. சரியான காரணங்களுக் கொவ்வாததும், மனதுக்குப் பிடிக்காததுமான அர்த்தம் சொல்லப்பட்டால், அந்த அர்த்தம் எவ்வளவு புத்திசாலித்தனம் ததும்பியதானாலும் அதை 'அனர்த்தம்' என்றே யான் கூறுவேன்.

ஹிந்து தர்ம சாஸ்திரங்களுக்கு தற்காலத்திய சங்கராசார்யர்களாலும், சாஸ்திரிகளாலும் பல விசித்ரமான வியாக்யானங்கள் செய்யப்படுகின்றன. அவ்வாறு திரித்துக் கூறுவதற்கு அவர்களுக்குள்ள உரிமையை நான் எதிர்க்கின்றேன். தற்காலத்தில் சாஸ்திர ஞானம் பெரிதும் குழம்பிக் கிடப்பதாக நான் அபிப்பிராயப்பட வேண்டி யிருக்கிறது.

அஹிம்சையைக் கடைப் பிடிக்காதவனும்,
சத்திய நெறியில் செல்லாதவனும்,
பிரும்மசரியத்தை அனுஷ்டிக்காதவனும்,
மண், பெண், பொன் ஆசைகளை விட்டொழிக்காதவனும்

ஒருக்காலத்திலும் ஞானியாக மாட்டான் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அந்த உண்மையை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கின்றவன்.

முக்தி நிலையை அடைய விரும்புபவர் குருநாதனின் மூலமாகவே அடைய முடியுமென்பதில் எனக்கு நம்பிக்கை யுண்டு. ஆனால் இந்தக் காலத்தில் கோடிக்கணக்கானவர் களுக்கு சரியான குருநாதன் கிடைக்கவே மாட்டான். பரி சுத்தமும், பரிபூர்ண ஞானமும் பொலியும் குருநாதர் கிடைப் பது தற்காலத்தில் மிக மிக அரிது. இதைக் கேட்டு எவரும் பின்னடைய வேண்டாம். உலகத்தின் எல்லா மதங்களையும் போலவே ஹிந்து மதத்திலும் அடிப்படையான தத்துவங் கள் பல உண்டு. அவைகள் என்றும் மாறுவதில்லை. அவை களை சுலபமாக யாரும் அறிந்து கொள்ளலாம். பரமாத்மா ஒருவர் இருக்கின்றார்; அவர் தனிப்பட்ட சக்தி யுடையவர்; ஜீவாத்மாவுக்கு மறு பிறப்பு உண்டு; அதற்கு ஜீவன் முக்தியு முண்டு—என்ற தத்துவங்களை ஒவ்வொரு ஹிந்துவும் நம்பு கின்றான். ஆனால் மற்ற மதங்களுக்கில்லாத ஒரு விசேஷம் ஹிந்து மதத்திற் கிருக்கின்றது. அதுதான் கோ சம்ரக்ஷணை. வருணாசிரம தர்மத்தைவிட கோ சம்ரக்ஷணை அவசிய மானது என நான் கருதுகின்றேன்.

வர்ணாசிரம தர்மானுஷ்டானம் மனித இயற்கையைச் சார்ந்தது என்பது என்னபிப்பிராயம். அந்த இயற்கைக் குணத்தை ஹிந்து மதம் தனது கோட்பாடாக ஏற்றுக்கொண்டது. மனிதப் பிறவிக்கும் வர்ணாசிரம தர் மத்துக்கும் சம்பந்தமுண்டு. தனது இஷ்டப்படி ஜாதியை மாற்றிக்கொள்ள ஒருவனாலும் ஆகாது. தனது ஜாதிக் கோட்பாடுகளை அனுஷ்டிக்காதவன் தலைமுறை தலைமுறை யாக வரும் ஒழுங்கை மீறுகிறானென்றே சொல்லவேண்டும். ஆனால் ஜாதிகளுக்குள் பல்வேறு உட்பிரிவுகளை ஏற்படுத்தி யது அநீதமான செய்கை. தாராளமாக நாலு பிரிவுகள் இருக்கும்போது இன்னும் ஏன் பிளக்க வேண்டுமோ தெரிய வில்லை!

சம்பந்தி போஜனம் செய்வதாலோ, அல்லது ஜாதி மாறி ஜாதியில் விவாகம் செய்து கொள்வதாலோ ஒருவனுக்கு பிறப் பினாலேற்பட்ட வர்ணநிலை தவறி விடுமெனக் கூறுவதற்கில்லை,

மனிதனுடைய நான்கு விதமான தொழிலைக் குறிப்பது வர்ணாசிரம தர்மமே யன்றி, அவனுடைய சமூக வாழ்வைக் கட்டுப்படுத்துவதற்கு அதற்கு இடமில்லை. ஒவ்வொரு வர்ணத்திற்கும் ஒவ்வொரு கடமை யுண்டு. ஆனால் எந்த வர்ணத்தாரும் சலுகைகள் பாராட்டுவதற்கு இடமில்லை. உயர்ந்த ஜாதியானென மமதை பாராட்டிக் கொள்வதும், பிறரை இழி ஜாதியாரென வகுத்தலும் புனிதமான ஹிந்து மதத்தில் கிடையாதென்பது எனது அபிப்பிராயம். ஆண்டவனின் சிருஷ்டியில் சேவை செய்யவே நாமனைவரும் பிறந்திருக்கிறோம். பிராமணன் தனது அறிவாலும், க்ஷத்திரியன் அவனது காவல் திறமையாலும், வைசியன் தனது வாணிபத் திறமையாலும், சூத்திரன் தனது தேக உழைப்பினாலும் உலகுக்கு சேவை செய்ய வேண்டுமென்பதே வருணாசிரம தர்மத்தின் கருத்து. அவ்வாறு கூறி விட்டதால், தேக உழைப்பு, தன்னையும் பிறரையும் காத்துக்கொள்ளல் முதலிய தொழில்களைச் செய்யாதிருப்பது பிராமண தர்மம் ஆகாது. வம்ச பாரம்பர்ய ரீதியை யொட்டி பிறப்பினால் பிராமணன் அறிவுக் களஞ்சியமா யிருக்கவேண்டும். அவன் பிறருக்கு ஞானமளிக்கும் தொழிலில் ஈடுபட வேண்டும். எடுத்த விஷயங்களை யெல்லாம் கற்றுக்கொள்ள வேண்டுமென சூத்திரன் விரும்பினாலும் அவனுக்குக் கற்றுக்கொள்ள பூரண உரிமை யுண்டு. ஆனால் அவன் தனது உடல் உழைப்பினால் சமூகத் தொண்டு செய்வானானால் அது சிலாக்கியமே. பிற ஜாதியானுக்கு வேறு விதமான சக்தி யிருக்கிறதே யென்று பொறாமைப்படுவதற்குத் துளியும் இடமில்லை யென்பதையும் அறிய வேண்டும். எந்தப் பிராமணனாவது தான் தான் மகா ஞானி என்று சொல்லிக்கொண்டால், அவனை அஞ்ஞானி யென்று அழைத்தலே பொருத்தமானது. அதே மாதிரி தமது சேவையே அனைவற்றினும் உயர்ந்தது என மமதை பாராட்டுவதற்கு எந்த ஜாதியாராலும் முடியாது. வர்ணாசிரமமென்பது தன்னடக்கம். சமூக சக்தியைச் சிக்கனமாகச் செலவழிக்கும் வரையறைதான் வர்ணாசிரமம்.

சமபந்தி போஜனம், கலப்பு விவாகம் முதலியவைகளி

னால் வர்ணாசிரம தர்மம் தவறுவதில்லையென்றாலும், சமபந்தி போஜனம், கலப்பு விவாகம் முதலியவைகளை ஹிந்து மதம் வெறுக்கின்றது. புலன்களை எவ்விதத்திலும் அடக்கவேண்டுமெனப் புகல்வது ஹிந்து மதம். உடலின் மீதுள்ள ஆசையைத் துறந்து ஆத்மாவை சுதந்திரமுடையதாக்க வேண்டுமெனப் போதிப்பது ஹிந்து மதம். தான் பெற்ற பிள்ளையோடு ஒரே பந்தியில் உட்கார்ந்து தகப்பன் சாப்பிட்டே தீர வேண்டுமென்பதில்லை. தனது குமாரனுக்கு விவாகம் செய்ய ஒரு குறிப்பிட்ட வகுப்பிலேயே பெண் தேடுவதென்பது ஒரு நல்ல கட்டுப்பாடு என்றே தோன்றுகிறது. பேரின்பத்தை யடைவதற்கு ஸதிபதி மார்க்கம் ஒன்றுதான் வழியென்று ஹிந்து மதம் கூறுவதில்லை. பிறப்பினால் ஆத்மா வீழ்ச்சி யுறுகிறதென்று சொல்கிறார்கள். அதே மாதிரி விவாகத்தினாலும் மனித ஜன்மா மற்றொரு வீழ்ச்சியை அடைகின்றது. பிறப்பென்னும் தளையினின்று விடுபட்டவனும் அதே மாதிரி இறப்பென்னும் ஆற்றைக் கடந்தவனுமே முக்தியை அடைகின்றனர். கலப்பு விவாகம், சமபந்தி போஜனம் முதலியவைகள் பரவாது சமூகத்தில் ஓர் தடையை வைத்துக் கொண்டிருப்பது ஆத்ம வளர்ச்சிக்கு அனுகூலமானது என்றே அபிப்பிராயப்படுகின்றேன். ஆனால் இந்தக் கோடு தாண்டாது வாழ்வதால் வர்ண தர்மத்தைக் கடைப்பிடித்து விட்டதாக எவனும் கூறிக்கொள்ள முடியாது. தனது அறிவினால் சமூகத்துக்குச் சேவை செய்வதில் தவறாதிருக்கும் ஓர் பிராமணன், தனது சகோதரனான சூத்திரனோடு சமபந்தி போஜனம் செய்துவிட்டதால் அவனது பிராம்மணத்துவம் அணுவும் குறைந்துவிடாது. ஆதலால் சோறு, விவாகம் முதலியவைகளில் ஏற்படுத்தியுள்ள கட்டுப்பாடு உயர்வு தாழ்வென்ற பேதங்களைக் கற்பிப்பதற்காக ஏற்பட்டதல்ல வென்பது விளங்கும். “நான் உயர்ந்த ஜாதியான்; ஆதலால் உன்னோடு சாப்பிடுவதாவது?” என வீம்பு பேசுகின்ற ஹிந்து அவனது தர்மத்தினின்று நழுவி விட்டானென்றே சொல்லவேண்டும்.

‘தீனி, சோறு’ இவற்றையே பெரிதாக, தற்காலத்திய

ஹிந்து மதம் கருதத் தலைப்பட்டுளது. ஒரு காலத்தில் ஒரு முஸல்மானுடைய வீட்டில் நடந்த விருந்தில் ஒரு வைதீக ஹிந்துவைக் கண்டு நான் பெரிதும் திடுக்குற்றதுண்டு. அங்கு ஒரு மகமதிய நண்பரால் தரப்பட்ட டம்ளரில் நான் பால் ஊற்றிக்கொண்டேன். அப்போது அந்த ஹிந்து அதைப் பார்த்து மனக் கவலையுற்றதாக எனக்குப் பட்டது. முஸல்மான் கையிலிருந்து வாங்கிய பாண்த்தை நான் குடிப்பது கண்டு, அவர் மனம் முழுதும் நொந்து போயிருக்க வேண்டும். யாரோடு சாப்பிடலாம், எதைச் சாப்பிடலாம் என்ற விஷயத்தைக் குறித்து மகா மகா கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டு ஹிந்து மதம் வேலை செய்துவந்தால், அதனுடைய உட்கருத்துகளில் பல அடியோடு மறைந்து போய்விடுமோவென நான் அஞ்சுகிறேன். மதுபானம் போன்ற லாகிரி வஸ்துக்களையும், மாமிசம் போன்ற கொழுப்பூட்டும் பதார்த்தங்களையும் விலக்குவதால் ஆத்மா சீக்கிரத்தில் முன்னேற்ற மடையுமென்பது வாஸ்தவம்தான். ஆனால் அந்த உபதேசத்தை மட்டுமே செய்வதற்காக ஹிந்து மதம் தோன்றவில்லை. பேதா பேதமின்றி பிறரோடு அமர்ந்து புலால் உண்பவர்களிலும் கடவுளுக்குப் பயந்து நடப்பவர்கள் உண்டு. அவர்களுக்கு முக்தி கிட்டுவதுண்டு. ஆனால் கடவுளை சதா சிந்தித்துக் கொண்டும், எனினும் மகா மதப் பித்தனைப் போல ஆகார விவகாரங்களில் மட்டும் நியமம் அனுஷ்டிப்பவர்கள் ஆண்டவனை அடையவே மாட்டார்கள் என்பது உறுதி.

கோ சம்ரக்ஷணம்தான் ஹிந்து மதத்தின் அச்சாணி போன்றது. மனிதப் பிறவியின் சிறந்த கருத்துக்கள் ஆனிறை காப்பதில் அடங்கி யிருக்கின்றது. வாயில்லாச் சீவன்களான பசுமாடுகள் நமது ஆத்மாவைத் துல்லியம் செய்யவே உள்ளன என்பது எனது கொள்கை. பசுவின் ஜீவனிலிருந்து மனித ஜீவன் அநேக உண்மைகளை அறியலாம். இப்படிப் பசுமாட்டை ஹிந்து மதத்தில் பெரிதாகக் குறிப்பிடுவதற்குச் சில காரணங்கள் எனக்குத் தோன்றுகின்றன. பாரத நாட்டில் மனிதனோடு உயிர்த் தோழமை

கொண்டது பசு! நாட்டு வளப்பத்தைக் காட்டுவது பசு! பால் தருவது மட்டுமின்றி விவசாயத்திற்கு உதவியாயிருப்பவை பசு மாடுகளே! 'இரக்கம்' என்ற குணத்திற்கு இலக்கியம் போன்றது பசு! அந்த சாந்தப் பிராணியைக் கண்டு நமக்கு இரக்கம் ஊறுகின்றது. பசுவைக் காப்பதென்றால் பராபரனின் படைப்பில் அடங்கிய பலவகை ஜீவராசிகளையும் காப்பதென்றே பொருள் கொள்ளவேண்டும். முதன் முதல் தோன்றிய முனிபுங்கவர் பசுவின் அருகிலேயே இருந்திருக்க வேண்டும். உலகுக்கு ஹிந்து மதம் போதித்த புனிதமான உபதேசம் கோ சம்ரக்ஷணமே யாகும். எந்த நாள் வரை ஹிந்துக்கள் பசுவைக் காக்கின்றார்களோ அந்நாள் வரை ஹிந்து மதம் பசுமையா யிருக்கும் என்பது திண்ணமன்றோ!

கோ சம்ரக்ஷணைக்காக உயிரை விடுவதற்கும் தயாராக இருக்கவேண்டும். ஆனால் ஒரு பசுவைக் காப்பதற்கான முயற்சியில் ஒரு மனிதனைக் கொல்வதென்றால் அச்செயலை ஹிந்து மதம் ஏற்றுக்கொள்ளாது. அஹிம்சா தர்மத்துக்கும் அக்கொலை விரோதமானதல்லவா? ஹிந்துக்கள் தங்கள் தவத்தினால், ஆத்மசுத்தியினால், தியாகத்தினால் பசுவைக் காக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். முஸல்மானோடு நிரந்தரமாகச் சண்டை போட்டுக் கொள்வதென்பதையே "கோ சம்ரக்ஷணை"யென தற்கால ஹிந்துக்களில் சிலர் நினைக்கிறாப் போலிருக்கிறது. அவர்களை 'அன்பினால் வெல்லுவதே உத்தம மார்க்கம் என்பதை எடுத்துக் காட்ட வேண்டுமா? 'சில காலத்திற்கு முன்பு ஒரு முகமறிய நண்பர் ஓர் புத்தகம் எனக்கு அனுப்பினார். பசுவின் மீதும், கன்றின் மீதும் நாம் செய்துவரும் அக்ரமங்கள் பல அப்புத்தகத்தில் எழுதப்பட்டிருந்தன. பசுவினிடமிருந்து இரத்த மெடுப்பது போல சொட்டுப்பால் மிஞ்சவிடாமல் கறந்துவிடும் கொடுமை; பசுவுக்குப் போதிய தீனி போடாது இளைக்கவிடும் பாபம்; கன்றுக்குட்டிக்குச் சேரவேண்டிய பாலையும் மனிதன் கறந்து கொள்ளும் அநியாயம்; காளை மாட்டுக்குக் கொட்டையடிக்கும் கொடுமை; அதிக பாரத்தை இழுக்கச் செய்து தார்க்

கோலால் குத்திப்போட்டும் கோரச் செய்கை முதலியன பல அப்புத்தகத்தில் எழுதப்பட்டிருந்தன. அந்த ஜந்துக்களுக்குப் பேசும் திறமை யிருக்குமானால், நமது அபிப்ராயங்களைப் பற்றி அவை முறையிட்டு அழுமல்லவா? இந்த ஊமைச் சீவன்களுக்கு தீங்கிழைப்பவர்கள் ஹிந்துக்களா? அவர்கள் கடவுள் அருளுக்குப் பாத்திரமாவார்களா? இவ்வாறு நாட்டைத் துன்புறுத்துவதற்கு இந்தியாவின் எழ்மை காரணமாகுமா? ஒருக்காலும் ஆகாதன்றோ. கோ சம்ரக்ஷணா சாலையென்று அங்குமிங்கும் சில இந்த நாட்டில் இருக்கின்றன. மாடுகளை ஒழுங்காகக் காப்பாற்றி அவைகளுக்குத் தொந்தரவு தராது பால் கறப்பதெவ்வாறு, அந்தப் பாலைக் கொண்டு நியாயமான வர்த்தக முறை நடத்துவதெங்ஙனம் என்பன போன்றவைகளை நாட்டுக்குப் போதிப்பது கோ சம்ரக்ஷணா சாலையின் கடமையாகும்.

நெற்றியில் நெடுக வீபூதி நாமம் அணிவதுதான் ஹிந்து தர்மமோ? மந்திரங்களைச் சரியாக உச்சரிப்பதுதான் நமது மத சித்தாந்தமோ? அங்குமிங்கும் ஓடியாடி யாத்திரை செய்வதுதான் மத சேவையோ? அவைகளெல்லாம் நமது மத போதனையல்ல வென்று நான் தைரியமாய்க் கூறுவேன். எனக்கு என் மனைவியிடத்தில் என்ன அன்பு ஊறுகின்றதோ அத்தகைய அன்பு மதத்தினிடமும் ஏற்படுகின்றது. என் மனைவியிடத்தில் எவ்வளவோ குற்றங் குறைகளுண்டு. ஆயினும் அவளிடத்தில் ஓர் ப்ரேமை ஏற்பட்டிருக்கிறதல்லவா? அதேபோல எனது சமயத்திடமும் நான் ப்ரேமை பாராட்டுகின்றேன். ஹிந்து மதக் கிரந்தங்களில் இரண்டு நூல்களைத்தான் நான் நன்கறிந்திருக்கிறேன். ஒன்று பகவத்கீதை, இன்னொன்று துளஸீ தாஸரின் இராமாயணம். கீதையின் இன்னிசை எனது அந்திய காலத்தில் இன்பந்தரும் சக்தியுடையது. அநேக கோயில்களில் கொடிய அக்ரமங்கள் நடக்கின்றனவென்று அறிந்திருப்பினும் நான் அவைகளிடத்தில் வர்ணிக்க முடியாதவாறு பக்தி காட்டுகிறேன். நான் ஓர் சீர்திருத்தக்காரன். ஆயினும் ஹிந்து தர்மத்தின் ஆணி வேராயுள்ள தத்துவங்களை ஒருபோதும் மீறி நடக்கமாட்டேன்.

விக்ரக ஆராதனையில் எனக்கு அவநம்பிக்கை கிடையாது. ஆயினும் ஏதோ ஒரு விக்ரகத்தைப் பார்த்தமட்டிலேயே பக்தி உணர்ச்சி பெருகும் அனுபவமும் எனக்கு ஏற்பட்டதில்லை. ஆனால் மனித இயற்கையோடு ஒட்டியது விக்ரக ஆராதனையாகும். உருவத்தைத் தேடி அலைவதுதான் மனித சுபாவம். க்ஷேத்திரத்துக்குச் சென்றதும் மனிதன் மனது ஒரு வசப்படுகின்றதல்லவா? ஆதலால் பிரார்த்தனைக்கு விக்ரகங்கள் உபகாரணமானவை. ஆயினும் பொம்மையின் உருவத்தைக் 'கடவுள்' என்று எந்த ஹிந்துவும் கருதுவதில்லை என்பதைக் கவனிக்கவேண்டும். விக்ரக ஆராதனை செய்வது பாபமன்று என்பது எனது அபிப்பிராயம்.

உலகத்தில் ஏதோ சிலர்தான் ஹிந்து தர்மத்தை அனுஷ்டிக்கலாம் என்று கட்டுப்பாடு செய்வதற்கில்லை என்று ஏற்படுகிறது. பூவுலகில் அவதரித்த எல்லாப் பெரியோர்களையும் வணங்குவதற்கு ஹிந்து மதம் இடந்தருகிறது. இதரர்களுக்குப் போதனை செய்து ஹிந்து மதத்திற்கு அவர்களை இழுக்க வேண்டுமென்ற ஹிந்து மதம் குறுகிய நோக்கக் கட்டளை யொன்றும் இடுவதில்லை. எவ்வளவோ விதம் விதமான ஆசாரமுடைய கோஷ்டிகளை ஹிந்துமதம் இழுத்துக்கொண்டு விட்டது. எவ்வாறு அவை ஒன்றாய்ச் சேர்ந்தன வென்பதை விவரிக்க முடியாது. அவனவன் கருத்துக்குத் தோன்றியவாறு கடவுளை வணங்கவேண்டும் என்பதுதான் ஹிந்து மதத்தின் போதனை. ஆதலால் வேறு எந்த மதத்தோடும முரண் கொள்ளாது ஹிந்து மதம் வாழ்கின்றது.

எனது ஹிந்துமத சித்தாந்தங்கள் இவ்வாறிருப்பதால், உலகத்தில் ஒரு கூட்டத்தாரை 'தீண்டாதார்' என ஒதுக்கி வைப்பதை நான் சகிக்க மாட்டேன். நல்ல மரத்தில் புல்லுருவி புறப்படுவதைப்போல இந்த "தீண்டாமை" இருக்கின்றது. ரொம்ப காலமாக, வம்ச பாரம்பர்யமாக, இப்படி ஒரு கூட்டத்தை விலக்கிவைப்பது இருந்துவருகின்றதே என்று ஒருவர் கூறலாம். எவ்வளவோ தப்பு வழக்கங்கள் அனாதி காலந்தொட்டு நமக்குள் இருந்து வருகின்றன. அத்தகைய

தப்பிதங்களுள் தீண்டாமையும் ஒன்று. உதாரணமாக பெண்களைப் பொட்டுக்கட்டிவிடுகிறார்கள்; பிறகு அப்பெண்கள் விபசாரத்தில் ஈடுபடுகின்றன; இந்த வழக்கத்தை ஹிந்து மதத்தில் ஒரு பகுதியென நினைக்கவும் நான் லஜ்ஜைப் படுகின்றேன். ஆனால் இந்தத் தீய வழக்கம் இந்தியாவில் பலவிடங்களில் அனுஷ்டானத்தில் இருக்கின்றதல்லவா? காளி தேவதைக்கு ஆடுகளை வெட்டுகின்றார்களே, அவ் வழக்கம் ஹிந்து மத போதனைக்கு முற்றிலும் விரோதமானது என்பது எனதபிப்பிராயம். அனாதிகாலந்தொட்டு வளர்ச்சியுற்று ஹிந்துமதம் பரிணாமத்தை அடைந்துளது. ஹிந்துஸ்தானத்தில் வசித்த மக்களின் மதத்தை "ஹிந்து மதம்" எனப் பிறநாட்டிலிருந்து வந்தவர்கள் அழைத்தார்கள். மதத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு மிருக பலி தருவது வெகு நாளாக உலகத்திலுள்ள துர் வழக்கம். அவ்வாறு மிருக பலி தருவது மதம் அன்று; அதிலும் முக்கியமாக ஹிந்து மதம் ஆகவே ஆகாது. ஹிந்து மதத்தில் கோ சம்ரக்ஷணையைப் பற்றி அவ்வளவு அழுத்தமாகச் சொல்லியிருப்பதால்தான் மாட்டிறைச்சி தின்பவர்களை ஜாதி ப்ரஷ்டம் செய்து வைத்தார்கள் என்று எண்ணவேண்டும். இந்த அபிப்பிராய பேதத்தினால் எவ்வளவோ சண்டைகள் ஏற்பட்டிருக்க வேண்டும். மாட்டிறைச்சி தின்றவனை ஜாதியினின்று விலக்கியதுமன்றி அவன் வம்சத்தையே விலக்கி வைத்தார்கள். அவ்வளவு தீவிரமான அபிப்பிராயம் இருந்தது என்பதையே இது காட்டுகின்றதல்லவா? ஆனால் நாளாக ஆக இந்தக் கட்டுப்பாடு அளவுக்கு மீறிப்போய் 'பஞ்சமன்' என்ற இழிகுல மொன்றை சிருஷ்டித்திருக்கின்றது. தீண்டாமையை அனுஷ்டிப்பது நியாயமெனக் கூறும் ச்லோகங்களும் நமது சனாதன நூல்களுள் நுழைக்கப்பட்டு விட்டன. இது என்ன நியாயமோ தெரியவில்லை. எனது ஆராய்ச்சி ஒருவேளை சரியோ தப்போ நான் அறியேன். ஆயினும் மனித நியாயத்திற்கும், தயாள சிந்தைக்கும், அனுதாப இதயத்துக்கும், அன்பு மதத்துக்கும் விரோதமானது இந்தத் தீண்டாமை. 'பசுமாடு' போன்ற ஜந்துவை இவ்வளவு பூஜை செய்ய

வேண்டுமென்று கட்டளையிட்டுள்ள மதம் மனித ஜன்மமான பறையனை இவ்வளவு இழிவாய் நடத்தவேண்டு மென்றும், அவன் வம்சத்தையே ஒதுக்கி வைக்கவேண்டு மென்றும் கட்டளையிடுமோ வென்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள். 'தீண்டாதார்' என்று ஒரு மனித வர்க்கத்தை இன்னும் விலக்கி வைத்திருக்க விரும்பும் ஹிந்துக்கள் என்னை முதலில் பிய்த்தெறியுங்கள். அவ்வாறு சாவது எனக்கு மனச் சாந்தி தரும். தூய்மையான ஹிந்து மதத்தில் தீண்டாமை என்னும் மாசு இருக்கும் வரை ஹிந்து மதத்திற்கு அவமானம் தான். ஹிந்துக்களுக்கு சுதந்திரத்திற்கு யோக்யதை கிடையாதென்பதும் உறுதி தான். எனக்கு உயிரைவிடப் பிரியமானது ஹிந்து மதம்! அதில் தீண்டாமை என்னும் மாசு இருப்பதால் தூக்க முடியாத ஒரு பெரிய பாரம் என் தலையில் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆண்டவனுடைய படைப்பில் யார் உயர்ந்தவன்? யார் தாழ்ந்தவன்? நம்மவருள் ஐந்தில் ஒரு பங்கு கூட்டத்தை மட்டும் 'பஞ்சமன்' எனத் தள்ளி வைப்பானேன்? அவர்களுக்கு மனித சமத்வ வாழ்வு தராதபோனல் கடவுளிடம் நமக்கு நம்பிக்கையில்லை என்றுதான் கொள்ள வேண்டும்.

---

## ஸனாதன ஹிந்து

ஒரு நண்பர் எனக்குப் பின்வருமாறு எழுதுகிறார் :— "பல தடவைகளில் தாங்கள் தங்களை ஸனாதன ஹிந்து என அழைத்துக்கொண்டிருக்கிறீர்கள். வேதங்கள், ஸ்மிருதிகள் முதலியவற்றில் நம்பிக்கை கொண்டவனே ஸனாதன ஹிந்து என்றும் கூறியிருக்கிறீர்கள். இந்த தர்ம சாஸ்திரங்களின் படி ஏற்பட்டுள்ள ஜாதிப் பாகுபாடுகள் இருக்கவேண்டியதன் அவசியத்தையும் வற்புறுத்தி யிருக்கிறீர்கள். நான்குக்கு மேல் ஜாதிகளிருக்கக்கூடாதென்பதும் தங்கள் கருத்து. வர்ணாசிரம தர்மத்தில் கூறப்பட்டுள்ள நான்கு வர்ணங்களைத் தாங்கள் அப்படியே ஏற்றுக்கொள்ளுகின்றீர்கள். ஆனல்

மனு தர்ம சாஸ்திரமும், இதர ஸ்மிருதிகளும் தோன்றிய காலத்திலேயே பல ஜாதிகளிருந்து அவை அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. வர்ண தர்மங்களில் குறிப்பிடப்பட்டுள்ள நான்கில் கடைசி ஜாதியாகிய சூத்திர ஜாதியினர் தெய்வீக வேதங்களையும், காயத்ரியையும் வாசித்து உச்சரிக்கக்கூடா தென சாஸ்திரங்களால் தடுக்கப்பட்டிருக்கின்றனர். வைதீ கர்களும் இதைத்தான் சொல்லுகிறார்கள். ஆனால் தாங்களோ ஒரு ஸனாதன ஹிந்துவுக்கு மேற்படி வேதங்களின் ஞான மிருக்கவேண்டுமென்றும், எந்த ஜாதியைச் சேர்ந்த ஸனாதன ஹிந்துவும் காயத்ரியை ஜபிக்கவேண்டுமென்றும் கூறுகின்றீர் கள். சாஸ்திரங்களை வாசித்தல், அல்லது மந்திரங்களை உச் சரித்தல் அல்லது கேட்டல் இவை யெல்லாம் மிகுந்த பாபச் செயல்கள் மாதிரி செய்யக் கூடாதனவையாக தடுக்கப்பட்டிருந் தால், சூத்ரரை ஹிந்துமதத்தைச் சேர்ந்தவர் என எவ்வாறு அழைக்க முடியும்? தண்ணீரி லிறங்காமல் ஒருவனை எங் ஙனம் நீந்தக் கற்றுக்கொள்ளும்படி தாங்கள் எதிர்பார்க்க முடியும்? தங்கள் கருத்துப்படி சூத்திரனாகப் பிறக்கும் ஒரு வன் ஸனாதன ஹிந்துவாக விருக்க முடியாது; அல்லது ஸனா தன ஹிந்து என்பவர் தாங்கள் கூறும் பொருளுக்கு முற்றி லும் மாறுபட்டவரா யிருக்கவேண்டும். நான் மேலே எடுத் துக் காட்டிய குதர்க்க வாதங்களுக்கெல்லாம் ஹிந்து என்ற பதம் இடங்கொடுப்பதற்கு உண்மையான ஸனாதன தர்மத் தைப் பின்பற்றும் தங்களைப்போன்ற ஒருவர் அனுமதிக்கும் வரையிலும், என்னைப்போன்ற பிராம்மணன் ஒருவன் 'ஹிந்து' என்ற பெயரைப் புகழ்ச்சியாகக் கொள்ள முடியாது. கடைசியாகத் தங்களது தினசரிப் பிரார்த்தனையில் காயத்ரியை ஜபிக்காமல் விட்டுவிட்டதுண்டா என்பதையும் அடியே னுக்கு அறிவிக்க வேண்டும்."

பதத்துக்குப் பதம் நான் பொருள் காண்பவனல்ல. ஆகவே உலகிலுள்ள பல மத நூல்களின் சக்தியையே ஆகர் ஷிக்க முயல்கின்றேன். சத்தியத்தையும், அஹிம்ஸையை யும் கருவிகளாகக் கொண்டு நான் இந்நூல்களுக்குள்ள சக்தி யின் ஆழத்தைப் பரீக்ஷிக்கிறேன். இப்பரீக்ஷைக்குச் சரிப்

பட்டு வராதனவற்றை நான் தள்ளிவிடுகிறேன்; சரிப்பட்டு வருவனவற்றைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுகின்றேன்.

வேதங்களைக் கற்றுத் தைரியங் கொண்டதற்காக ஸ்ரீராம பிரான் ஒரு சூத்திரரைத் தண்டித்தார் என்ற கதை தவறாக ராமாயணத்தில் புகுத்தப்பட்டதெனக் கூறி, அதை நான் தள்ளிவிடுகிறேன். என்னுடைய கருத்துப்படி பரிசுத்தத்தின் நிலைக்களனாய் விளங்கும் ராமனை சரித்திரத்தில் தோன்றிய ஒருவனாகப் பாவித்து நான் வணங்கவேயில்லை; சரித்திர புருஷனென்றால் காலம் மாறுபட மாறுபட, புதிய ஆராய்ச்சிகள் தோன்றத் தோன்ற, மேற்படி புருஷனைப்பற்றிய தகவல்களும் புதியனவாகக் கண்டு பிடிக்கப்படும். துளசிதாஸ், ஸ்ரீ ராமபிரானை சரித்திர ராமனாகக் கொண்டாடவே யில்லை. சரித்திர முறையைக் கொண்டு பரீக்ஷித்தால் துளசி தாஸரது ராமாயணம் குப்பைத் தொட்டியில் எறியப்படுவதற்குத்தான் தகுந்ததாக விருக்கும். ஆனால் பாரமார்த்திக அனுபவங்களை அறிவிக்கும் துறையில் நோக்கினால், எனக்கு அது இணையற்றதாக விளங்குகின்றது. துளசி தாஸ் ராமாயணம் என்ற பெயரில் எத்தனையோ பதிப்புகள் வெளியாகின்றன. இவற்றிலெல்லாம் காணப்படும் ஒவ்வொரு வார்த்தையையும் நான் வேத வாக்காகக் கொள்ளவில்லை. ஒரு புத்தகத்தில் எத்தகைய உணர்ச்சி ததும்பி நிற்கின்றதோ அதைக்கண்டு நான் ஸ்தம்பித்து விடுகிறேன்.

வேதங்களை சூத்திரர்கள் கற்கக்கூடாதென்று தடுக்கப்பட்டிருந்ததை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. உண்மையில், என்னுடைய அபிப்பிராயத்தில், தற்போது அடிமைகளாயிருக்கும் வரையிலும், நாமெல்லோருமே சூத்திரர்கள்தான். அறிவு அல்லது ஞானமென்பது ஒரு குறிப்பிட்ட வகுப்பினரோ அல்லது பிரிவினரோ தான் அனுபவிக்க வேண்டுமென்ற சொத்தல்ல. அது யாவருக்கும் உரியது. ஆனால் தகுந்த பயிற்சியில்லாத காரணத்தால் உயர்ந்த தத்துவங்களின் நுட்பத்தை ஒரு சிலரால் அறிந்துகொள்ள முடியாமலிருக்கலாம். கணித சாஸ்திரத்தின் ஆரம்பக் கணக்குகள்

தெரியாமல் பெரிய பெரிய கணக்குகளைப் போட ஒருவனால் முடியுமா?

கடைசியாக புனிதமான ஒரு காரியத்தைச் செய்வதில் சில வரையறைகள் ஏற்படுத்தப்பட்டிருப்பதில் எனக்கு நம்பிக்கை யுண்டு. காயத்ரியை ஜபிப்பதில் சில வரையறைக ளிருக்கின்றன. குறிப்பிட்ட காலங்களில், குறிப்பிட்டவாறு நம்மைப் பரிசுத்தப் படுத்திக்கொண்டுதான் காயத்ரியை ஜபிக்கவேண்டு மென்றிருக்கிறது. இந்த வரையறைகளில் எனக்கு அடக்கமுடியாத நம்பிக்கை யிருந்தபோதிலும், எப்பொழுதும் அவற்றைச் சரிவர நிறைவேற்றிவைக்க என்னு லியலவில்லை யாதலாலும், நான் பிற்காலத்திய மகான்களைப் பின்பற்றி வருகிறேன். ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டுள்ள துவாதச மந்திரத்தையும், அல்லது இன்னும் சுலபமாகவுள்ள துளசிதாஸரது ராமாயணத்தையும், கீதா ஸ்லோகங்களில் சிலவற்றையும், பிராக்ருதத்தைச் சேர்ந்த சில பஜனைக் கீதங்களையும் அனுஷ்டிப்பதிலேயே திருப்தி கொள்ளுகிறேன். இவைதான் எனது தினசரி ஆத்மார்த்த உணவு—எனது காயத்ரி. தினந்தோறும் எனக்கு அவசியமான எல்லா சாந்தியையும், மன ஆறுதலையும் இவை எனக்கு அளிக்கின்றன.

---

## வர்ணாசிரம தர்மம்

தற்கால ரீதியில் விளங்கும் ஜாதியில் எனக்கு நம்பிக்கையே கிடையாதென்று நான் பல தடவை சொல்லியிருக்கிறேன். அது நம்முடைய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது. மனிதருக்கு மனிதர் வித்தியாசம் பாராட்டப் படுவதிலும் எனக்கு நம்பிக்கை கிடையாது. மனிதர் யாவரும் சமம். ஆனால் சமமென்பது ஆத்மாவைக் குறிக்குமே ஒழிய உடலை அல்ல. ஆகவே சமத்துவமென்பது மன நிலையைப் பொறுத்ததாகும். இந்தப் பிரகிருதி உலகில் ஏராளமான வித்தியாசங்களை நாம் காண்ப

தால், சமத்துவத்தைப் பற்றியே நாம் சிந்தனை செய்து, அதையே நிலைநாட்ட முயல வேண்டும். இந்த வெளிப்புற வேற்றுமைகளுக்கு மத்தியிலிருந்து கொண்டே நாம் சமத்துவத்தை உணர வேண்டும். இன்னொருவனை விடத் தான் உயர்ந்தவன் என ஒருவன் எண்ணுவது பெரும் பாவமாகும். இங்ஙனமாக அந்தஸ்தில் மனிதருக்கு மனிதர் வித்தியாசம் பாராட்டும் ஜாதி, பெருந் தீமையை விளைவிக்கின்றது.

ஆயினும் வர்ணாசிரம தர்மத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நான்கு வர்ணங்களிலும் எனக்கு நம்பிக்கையுண்டு. இந்தப் பாகுபாடுகள் பாரம்பரியத் தொழில் சம்பந்தமாக ஏற்பட்டிருப்பவை. வித்தை யறிவித்தல், சக்தியற்றவரைப் பகைவரினின்றும் காத்தல், நிலங்களை உழுது பயிர் செய்தல், உடலாலுழைத்துப் பணி செய்தல் என்னும் நான்கு தொழிலையும் குறிக்க பிரும்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரனென்ற நான்கு வர்ணங்களுண்டாயின. இந்தத் தொழில்கள் எல்லா மனித வர்க்கத்திற்கும் பொதுவானவையே. ஆனால் ஹிந்து மதம் இவற்றை நமது வாழ்வின் முறையாக அங்கீகரித்துக் கொண்டு, ஜனசமூகத்தில் ஒருவரோ டொருவர் சம்பந்தம் செய்து கொள்ளுவதிலும், ஜனசமூக நடத்தையிலும் அதை அனுஷ்டித்து வருகின்றது. ஆகர்ஷண சக்தி என்று ஒன்றிருப்பதை ஒருவன் அறிந்தாலும் அறியாவிட்டாலும் அது நம் எல்லோரையும் பாதிக்கின்றது. ஆனால் இந்த விதியை அறிந்த விஞ்ஞான சாஸ்திரிகள் உலகமே கண்டு பிரமித்து நிற்கும் சில பலன்களைப் பயக்கும்படி அதை உபயோகித்திருக்கின்றனர். இங்ஙனமே வர்ணாசிரம தர்மத்தைக் கண்டு பிடித்து, அதை அனுஷ்டித்து வருவதன் மூலமாக ஹிந்து மதம் உலகத்தையே திடுக்கிடச் செய்துளது. காலம் ஆக ஆக, ஹிந்துக்கள் சோம்பேறிகளாகி, அவரவருக்குரிய காரியத்தை அவரவர் செய்வது தவறியதால், வர்ண தர்மம் அழிந்து, எண்ணிக்கை யற்ற ஜாதிகள் தோன்றின; இதன் காரணமாகக் கலப்பு விவாகம், சமபந்தி போஜனம் இவை சம்பந்தமாக அனாவசியமானவையும், தீங்கிழைப்பவையுமான பல தடைகள் ஏற்பட்டன. இந்தத் தடைகளுக்கும் வர்ண

சிரம விதிக்கும் யாதொரு சம்பந்தமு மில்லை. வேறுபட்ட வர்ணங்களைச் சேர்ந்தவர்கள் ஒருவருக் கொருவர் விவாகம் செய்து கொள்ளலாம்; சாப்பிடவும் செய்யலாம். கற்பு, சுகாதாரம் என்பவற்றைக் காப்பதற்காக மேற்கூறிய தடைகள் அவசியமா யிருக்கலாம். ஆனால் சூத்திரரும் பிராமணரும் கொள்வன கொடுப்பன செய்து கொள்வதால் வர்ணாசிரம தர்மத்துக்கு விரோதமாக யாதொரு குற்றமும் செய்தவராக மாட்டார்கள்.

மற்றொரு மதத்தினரைக் கலியாணம் செய்துகொள்ளுதல் வேறொரு விஷயம். இதில் கூட, அவரவர் தம் தம் மதத்தை அப்படியே அனுஷ்டிக்க இடமிருக்கையில், இம் மாதிரி விவாகங்களுக்கு ஆன்மார்த்தத் துறையில் யாதொரு தடையுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால் இத்தகைய கலப்பு விவாகங்களால் நாட்டில் வகுப்பு ஒற்றுமையும், சாந்தமும் ஏற்பட்டு விடுமென நான் நம்பவில்லை. ஐரோப்பாவில் கலப்பு விவாகமும், சமபந்தி போஜனமும் நடக்கின்றன. ஆயினும் ஹிந்துக்களும், நாமும் என்றுமே சண்டையிட்டுக் கொள்ளாத ஒரு முறையில் ஐரோப்பியர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றனர். வகுப்பு ஒற்றுமைக்கும், கலப்பு விவாகம், சமபந்தி போஜனத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்பது எனது திடமான அபிப்பிராயம். வேற்றுமைக்குக் காரணங்கள், பொருளாதார, ராஜீய சம்பந்தமானவை. இவற்றை நீக்கினால் தான் வகுப்பு ஒற்றுமை ஏற்படும்.

வர்ணாசிரமத்துக்கு நான் எந்த முறையில் பொருள் கொள்ளுகிறேனோ அத்தகைய வர்ண தர்மம் தற்பொழுது ஹிந்து மத அனுஷ்டானத்தில் இல்லவேயில்லை. பிராம்மணர்களெனப் படுவோர் வித்தை கற்பிப்பதில்லை; அவர்கள் வேறு வேலைகளை யெல்லாம் செய்கின்றனர். மற்ற வர்ணத்தாரும் இதே மாதிரிதான். உண்மையில், அன்னியரின் ஆதிக்கத்தின் கீழிருப்பதால் நாம் எல்லோரும் அடிமைகளா யிருக்கிறோம்.

---

## பிரார்த்தனை—1

பிரார்த்தனைதான் என்னைக் காப்பாற்றி வருகின்றது. அது இல்லாமலிருந்தால் பல வருடங்களுக்கு முன்னமேயே எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கும். 'எனது சத்திய சோதனை'யைப் படித்தால் உங்களுக்கு இது நன்றாய்த் தெரிய வரும். சொந்த முறையிலும், பொதுஜன ஊழியன் என்ற முறையிலும் நான் கடுமையான கஷ்டங்களை அனுபவிக்க நேரிட்டதை நீங்கள் அறியலாம். அவ்வப்போது திடீர் திடீரென்று ஏக்கம் பிடிக்கும். அப்போதெல்லாம் பிரார்த்தனை செய்வேன். எனது ஏக்கம் பறந்து போய்விடும். ஆனால் சத்தியத்தை நான் எவ்வளவு எனது வாழ்க்கையில் கொண்டிருக்கின்றேனோ அவ்வளவு தூரம் பிரார்த்தனையை நான் கொள்ளவில்லை. பிரார்த்தனை செய்வது ஓர் அவசியமாக எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

பிரார்த்தனை செய்யச் செய்ய கடவுள் பக்தி அதிகமாயிற்று. ஆதலால் பிரார்த்தனை செய்வதில் ஒரு ஆசையும் ஆனந்தமும் ஏற்படத் தொடங்கிற்று. 'பிரார்த்தனை' இல்லாமற் போனால் உயிர் வாழ்வதே ஓர் பாலைவனம் போல் தோன்றிற்று. தென்னாப்பிரிக்காவில் கிறிஸ்தவக் கோயில்களின் பிரார்த்தனைகளுக்கு நான் சென்றிருக்கிறேன். ஆனால் எனக்கு அப்போது அதில் பிடித்த மேற்படவில்லை. பிரார்த்தனையில் கலந்து கொள்ளவில்லை. கடவுளை அவர்கள் வளைத்துக் கொண்டிருக்கிறார்கள், அது என்னால் முடியாத காரியமாயிருந்தது.

கடவுளிடத்தில் முதலில் எனக்கு போதிய நம்பிக்கையில்லாதிருந்ததால், அவரைக் குறித்து பிரார்த்தனை முதலியவைகளிலும் நான் அவநம்பிக்கை கொண்டிருந்தவன். ஆதலால்தான் நான் தோற்றுப் போனேன். ஏதோ வாழ்வில் ருசியில்லாமலே இருந்தது.

பிறகுதான் அறிந்துகொண்டேன். உடலுக்கு எவ்வாறு உணவு அவசியமோ அவ்வாறே ஆத்மாவுக்கு பிரார்த்

தனை அவசியமென அறிந்தேன். ஆனால் உடலுக்கு உணவை விட, ஆத்மாவுக்குப் பிரார்த்தனை கட்டாயம் வேண்டும் என்பது இப்போது தெரிகிறது. தேகத்தை ஆரோக்கியமாக வைத்திருப்பதற்கு அவ்வப்போது பட்டினி போட வேண்டியது அவசியம். அதே மாதிரி ஆத்மாவைப் பட்டினி போடலாமா? ஆத்மாவை ஒருக்காலும் பட்டினி போடக்கூடாது என்பது விளங்குகின்றது. புத்தர், ஏசுநாதர், முகம்மது நபி முதலிய பெரியோர் பிரார்த்தனையினால் தான் முன்னேறியதாகக் கூறியிருக்கிறார்கள். பிரார்த்தனையின்றி உயிர் வாழ முடியாதெனவும் கூறியிருக்கிறார்கள்.

இப்போது கோடிக் கணக்கான ஹிந்துக்களும், முஸல்மான்களும், கிறிஸ்தவர்களும் பிரார்த்தனை செய்தே கவலையை நீக்கிக்கொள்கிறார்கள். அவர்களைப் பொய்யர்களென்றும், ஏமாந்தவர்களென்றும் சிலர் கூறுகின்றனர். ஆனால் இந்தப் 'பொய்'தான் எனது உயிருக்கு இன்றியமையாததாக இருக்கிறது. சத்திய உபாசகனான எனக்கு உயிர் போன்றுள்ள பிரார்த்தனை 'பொய்' ஆகுமா?

ராஜீய வானத்தில் ஏக்கமென்னும் மேகம் சூழும் போதெல்லாம் எனது மனச் சமாதானத்தை நான் இழப்பதில்லை. எனது சமாதானத்தைக் கண்டு அநேகர் வியந்ததுண்டு. அந்த சமாதானம் எங்கிருந்து வருகிறது? பிரார்த்தனையிலிருந்துதான். நான் படித்தவனல்ல; நான் வெறும் பிரார்த்தனைக்காரனென்று தாழ்மையோடு சொல்லிக் கொள்கின்றேன். அவரவர் மனோ தர்மப்படி பிரார்த்தனை நடத்தலாம் என்பது எனது அபிப்பிராயம். ஆனால் நமது முன்னோர்கள் நடந்து சென்ற பழைய பாதையில் நாமும் பின்பற்றிச் செல்வது சுலபமெனத் தோன்றுகிறது.

கடவுளிடத்தில் நம்பிக்கை ஊட்டுமாறு பிறருக்குப் போதனை செய்ய நான் அறியேன். சிலவற்றை திருஷ்டாந்தமாக நிரூபிக்க முடியும்; சில தாமே நிரூபித்துக்கொள்ளும்; சிலவற்றை ஒருபோதும் நிரூபணம் செய்ய முடியாது. க்ஷேத்திர கணித சாஸ்திரத்தில் அடிப்படையான சில விஷயங்கள்

உண்டு. அதே மாதிரி கடவுளின் சக்தியும் அடிப்படையான ஓர் உண்மை. மனித இதயத்தின் சக்தியைக் கொண்டு அவரை அறிய முடியாமலு மிருக்கலாம்.

அறிவினால் ஆண்டவனை அறிவதென்பதைப் பற்றி பிரஸ்தாபிக்கவே இடமில்லை. உறையும் இறைவனை உணருவதற்கு பிரத்தியக்ஷப் பிரமாணம் கொடுப்பது எவ்வளவு துர்லபமோ அதேமாதிரி அறிவினாலும் ஆண்டவனை அளக்க முடியாது. ஏனெனில் அவர் காரணங்களையும் காரியங்களையும் கடந்தவர்.

'கடவுள் உளர்' என்று நிரூபிக்க ஏதேதோ சாக்ஷியங்கள் சொல்லுகிறார்கள். ஆனால் அந்தமாதிரி காரணம் கூறி கடவுளை நிர்ணயித்து உலகோரின் அறிவை அவமானப் படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் ஓர் சிறு குழந்தை எவ்வாறு தாயினிடம் நடந்து கொள்ளுமோ அதேமாதிரி பகவானிடத்தில் ஒரு திட நம்பிக்கையோடு நான் வாழ்கின்றேன். நானிருப்பது உண்மையானால் என்னைப் படைத்த பகவானும் இருக்கின்றார் என்பது எனது உறுதி. உலகில் கோடிக் கணக்கானவர்களுக்கும் இதேமாதிரி உறுதி உண்டு. பகவானைப்பற்றி வர்ணிக்கவோ, அவரது அனந்த கல்யாண குணங்களைப்பற்றி விவரிக்கவோ எல்லோராலும் முடியாமலிருக்கலாம். 'ஆனால் அவர்களுடைய வாழ்க்கையில் ஊடுருவி நோக்கினால் 'பகவத் பக்தி' என்பது ஓடுவதை ஒவ்வொரு செய்கையிலும் காணுவோம்.

நம்முடைய நம்பிக்கையை மூடியிருக்கும் மாயையைத் தொலைக்க வேண்டும். அதாவது நமக்கு ஆண்டவனிடத்தில் நம்பிக்கை ஏற்பட வேண்டுமானால் நாம் இதுவரை உலகில் படித்துள்ள பலவிதமான படிப்புக்களை மறந்து விட வேண்டும்; அவை நமது அறிவை மயக்கி வழி தெரியாத இடத்தில் கொண்டு போ யிருக்கின்றன. அந்த தாத்காலிகப் படிப்பை மறந்தால் நமக்கு வழி தானே புலனாகும். மெய்யடக்கத்தோடும்; நமக்கு ஒன்றும் தெரியாது என்ற எண்ணத்தோடும், ஒரு நம்பிக்கையோடும் நாம் தொடங்க வேண்டும். அகண்ட

மான இந்த அண்ட கோளத்தில் மனித ஜன்மம் எடுத்த நாம் அணுவினும் கேவலமாக வாழ்ந்து வருகின்றோமல்லவா ?

அணுவாவது அதற்கிடப்பட்டுள்ள சட்டப்படி நடக்கும். நாம் இயற்கையை எதிர்ப்பவர்களாதலால் இன்னும் கேவலமானவர்களாக வாழ்கின்றோம். ஆனால் நம்பிக்கை இழந்தவர்களுக்கு நான் ஒன்றும் சொல்ல முயலவில்லை.

கடவுளை நம்புவோர் பிரார்த்தனை செய்ய வேண்டும். பிரார்த்தனை அத்யாவசியம். நமது வாழ்க்கை முழுவதுமே பிரார்த்தனை ! அவ்வப்போது பகவத் பக்தியை அதிகமாக்கிக் கொள்வதற்காகவே குறிப்பிட்ட நேரங்களில் குறிப்பிட்ட விதத்தில் பெரியோர்கள் பிரார்த்தனை செய்து வந்தனர். பிரார்த்தனையினால் நமது வாழ்வில் ஏற்படும் கஷ்டம் என்னும் மாயையினின்று, மனக் கற்பனையினின்று நாம் விடுபடுவோமென நான் உறுதி கூறுகின்றேன்.

---

## பிரார்த்தனை—2

ஒரு வைத்திய நிபுணர் எனக்கு வரைகின்றார் :

"பிரார்த்தனை செய்வதற்கு எது சிறந்த முறை? எவ்வளவு நேரம் பிரார்த்தனையில் செலவிட வேண்டும்? என்னுடைய அபிப்பிராயத்தில் நியாயமாக வாழ்வதே பிரார்த்தனையென நினைத்திருக்கிறேன். எல்லோருக்கும் நியாயம் வழங்குவதில் பூரண மனமுடையவனுக்கு ஒரு விதப் பிரார்த்தனையும் அவசியமில்லை. அநேகர் ஸந்தியா வந்தனத்தில் அதிக நேரம் செலவிடுகின்றனர். அதில் 100க்கு 95 பேருக்கு தாங்கள் சொல்வதின் அர்த்தம் தெரியாது. பிரார்த்தனை யென்பது அவரவர்களுடைய தாய் மொழியிலிருக்க வேண்டுமென நான் அபிப்பிராயப் படுகிறேன். அது தான் ஆத்மாவைக் கவ்வும். மனதார ஒரு நிமிஷம் பிரார்த்தனை செய்தால் போதாதா? பாவம் செய்ய மாட்டேனென பகவானிடம் பிரமாணம் செய்வது போதாதா ?"

மிக்க வணக்கத்தோடு பகவானை வேண்டுவதே பிரார்த்தனை யெனப்படும். தெய்வத்திற்காகச் செய்யும் எதையும் பிரார்த்தனை யென்று சொல்லுகிறார்கள். தங்களைப் படைத்தவனைக் குறித்து அநேக ஹிந்துக்களும், முகமதியர்களும், கிறிஸ்தவர்களும், யூதர்களும், ஒவ்வொரு நாளும் செய்கின்றார்களே அவை என்ன? படைத்தவனிடத்தில் ஹிருதயத்தைப் பறி கொடுப்பதும், அவருடைய ஆசியைக் கோருவதுமே பிரார்த்தனை யென நான் கருதுகின்றேன். ஆதலால் நம்முடைய மனோ நிலையை அது பொறுத்ததே யன்றி நாம் முணுமுணுக்கும் வார்த்தைகளைப் பொறுத்ததாக இல்லை. நம்முடைய முன்னோர்களால் கோர்க்கப்பட்டு, வம்சம் வம்சமாக வந்திருக்கும் வார்த்தைகளுக்கு ஓர் சக்தி உண்டு. அவைகளைத் தாய் மொழிக்கு மாற்றினால் பிரயோசனமில்லை. உதாரணமாக காயத்ரி மந்திரத்தை குஜராத்தியில் மொழி பெயர்த்தால் அந்த சக்தி இருப்பதில்லை. 'ராமா' என்ற பதத்தை உச்சரித்தவுடன் ஹிந்துக்கள் பரவசமாகி விடுகிறார்கள். ஆனால் God என்ற ஆங்கில பதத்தின் அர்த்தத்தை அறிந்திருப்பினும் உணர்ச்சி உண்டாவதில்லை. வெகு நாளாக உபயோகிக்கப்படுவதாலும், புனிதத்தோடு பிணைக்கப்படுவதாலும் வெறும் வார்த்தைகளுக்குக் கூட ஓர் சக்தி உண்டாகி விடுகின்றது. ஆதலால் வழக்கத்திலுள்ள மந்திரங்களும், ச்லோகங்களும் சம்ஸ்கிருதத்திலே அப்படியே இருக்கவேண்டியது அவசியமாகும். ஆனால் அவைகளின் அர்த்தத்தையும் அறிந்துகொள்ள வேண்டுமென்பதும் ஏற்படுகின்றது.

இவ்வளவு நேரம்தான் பிரார்த்தனை செய்ய வேண்டுமென ஒருவிதக் கட்டுப்பாடும் இல்லை. அது அவரவர்களுடைய மனோபாவங்களைப் பொறுத்தது. ஒவ்வொருவனுடைய வாழ்க்கையிலும் சில வேளைகளுண்டு. தன்னுடைய தவறுகளை உணர்ந்து, பகவானிடம் மன்னிப்புக் கேட்பதும், தனக்கு மேன்மேலும் நற்குணத்தையும் சக்தியையும் தர வேண்டுமெனக் கேட்பதும் அவசியம். பிரார்த்தனை செய்வதில் ஒருவனுக்கு ஒரு நிமிடமே போதுமானது. இன்னொருவனுக்கு 24 மணிகூடப் போதாது. ஆனால் ஸர்வம் ஈசமயம்

என் எண்ணுபவர்கள் எந்தத் தொழில் செய்வதையும் பிரார்த்தனையாக நினைப்பர். அவர்களே எப்போதும் பிரார்த்தனையில் ஈடுபடுபவர்கள். செய்வதெல்லாம் பாபமாயும், கோருவதெல்லாம் தன்னலமாயும் உள்ளவர்கள் எவ்வளவு பிரார்த்தனை செய்தாலும் போதாது. பொறுமையும், நம்பிக்கையும், சுத்தமாக வேண்டுமென்ற முயற்சியும் உள்ளவர்கள் தங்களுக்கு கடவுளின் அருள் வரும்வரை பிரார்த்திக்க வேண்டும். நம்மைப் போன்றவர்களுக்கு ஏதாவது மத்திய மார்க்கம் இருக்க வேண்டும். நம்முடைய வேலைகளெல்லாம் பகவானுடையது என்று நாம் எண்ணுபவர்களல்ல. முழுச் சுயநலமிகளுமல்ல. அதற்காகத் தான் மத அனுஷ்டானங்கள் வரையறுக்கப் பட்டிருக்கின்றன. ஆனால் கல்மஷமில்லாதவர்களுக்குக்கூட இந்த வைதிக கிருத்யங்கள் ஏதோ கேவலம் வழக்கமாவும், அனுஷ்டானமாகவும் இருந்து வருகின்றன. ஆதலால் இந்தச் செய்கைகளில் மனம்தான் பிரதானம் என்பது ஏற்படுகிறது.

ஆனால் பகவானிடம் குறிப்பிட்ட வரங்களைக் கோரும்போது அவைகளைத் தாய்மொழியில் கேட்பதே நலம். உலகிலுள்ள எல்லாவற்றிற்கும் நியாயமாக நடக்க அருளும்படி பகவானைக் கேட்பதும் சிறந்த பிரார்த்தனைதான்.

---

## தியானத்தின் தத்துவம்

### ஓர் சம்பாஷணை

சீடர்—'தியானம்' என்றால் என்ன?

மகாத்மாஜி—'தியானம்' என்பது ஆண்டவனைக் குறித்து மிகவும் வணக்கத்துடன் ஒன்றைக் கேட்பது. இது பக்தி சம்பந்தமான செயலுக்கும் உபயோகிக்கப் படுகின்றது. ஆண்டவனுடன் ஒன்றி நிற்க ஹிருதயம் வேட்கை கொள்வதே தியானமாகும். ஒருவன் தன்னுடைய தவற்றை ஒப்புக் கொள்வதும் தியானத்தின் பால் சேர்கின்றது.

சீ.—நாம் எந்தக் கடவுளைக் குறித்துத் தியானம் செய்வது? எத்தனையோ கடவுள்களும், எண்ணிக்கையற்ற மதங்களும் இருக்கின்றனவே.

ம.—அன்பனே! கடவுளுக்கு ஆயிரம் பெயருண்டு. அவருக்குப் பெயரும் கிடையாது. நமக்குத் தோன்றும் பெயரால் நாம் அவரைத் தியானிக்கலாம். அவரைச் சிலர் ராமனென்றும், சிலர் கிருஷ்ணனென்றும், இன்னும் சிலர் ரஹீம் என்றும், வேறு சிலர் வேறு பெயரைக் கொண்டும் அழைக்கின்றனர். இப்பெயர்களனைத்தும் ஆண்டவனையே குறிக்கின்றன. எல்லோரும் ஒரே கடவுளைத்தான் வணங்குகின்றனர்.

சீ.—அப்படியானால் வெவ்வேறு பெயரைக் கொண்டு அவரை நான் வணங்கவேண்டுமோ?

ம.—உனக்கு இஷ்டமிருந்தாலும் அது முடியாததாகும். எல்லா உணவுப் பொருள்களும் எல்லாருக்கும் பொருந்தியிராமலிருப்பது போன்று எல்லாப் பெயர்களும் எல்லாருக்கும் பிடிக்காது. ஒவ்வொருவரும் தம் தமக்குப் பிடித்த பெயரால் அவரை ஸ்மரணை செய்யலாம்.

சீ.—தியானத்தில் எது முக்கியம்? நாம் உச்சரிக்கும் சொற்களா அல்லது மனதின் பரிசுத்தமா?

ம.—சொற்களல்ல, மனத்தூய்மை தான். தியானத்தை உதடுகளினால் செய்யக்கூடாது; அங்ஙனம் வெறும் உதடுகளை அசைத்துச் செய்யப்படும் தியானம் தியானமேயாகாது. தியானத்தை ஹிருதயத்தினால் செய்யவேண்டும். ஆதலால் தான் வாயில்லா ஊமையனும் கடவுளைத் தியானிக்கலாம். வாயினின்று வெளிவரும் மொழிகள் அமிர்தமாகவும், ஆனால் ஏதோ கொஞ்சம் விஷத்திலாழ்ந்தவையாகவும் இருந்தால் அப்படிப்பட்டவர்களது தியானத்தை ஆண்டவன் கேட்பதே கிடையாது. ஆதலால் கடவுளை வணங்குபவன் முதலில் தனது மனதைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும்.

சீ.—பரிசுத்தம், புறம், அகம் என இருவகைப்பட்ட

தென நான் கேள்விப் பட்டிருக்கிறேன். இதில் தாங்கள் எதை முக்கியமெனக் கருதுகின்றீர்கள்?

ம.—இரண்டும் அத்யாவசியமே. இரண்டிற்கும் தான் தூய்மை எனப் பெயர். புறப் பரிசுத்தம் என்பது உடலைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுதல், சுதரணிதல் முதலியன; அகத்தூய்மை எனப் படுவது, கற்பு, அடக்கம் முதலியவைகளையும், சத்தியத்தையும் அஹிம்ஸையையும் கடைப்பிடிப்பதாகும்.

சீ.—மகாத்மாஜி, இப்பொழுது ஆயிரக்கணக்கான பேர்கள் சந்தியாவந்தனத்தைத் தவறாமல் செய்கின்றனர். ஆனால் அவர்கள் கூறும் மந்திரங்களின் பொருளே அவர்களுக்குத் தெரியாது. எல்லோரும் எளிதில் அறிந்துகொள்ளக் கூடிய வகையில் இம்மந்திரங்களை மொழிபெயர்த்தால் நல்லதல்லவா?

ம.—சரிதான், தியானம் மனமொத்ததா யிருக்கவேண்டுமாயின், பொருள் விளங்க வேண்டியதுதான். ஆனால் தொன்று தொட்டு வழங்கிவரும் மந்திரங்களுக்கு ஓர் தனிப்பட்ட சக்தி இருப்பதால் அவற்றை மொழி பெயர்த்தால் இச்சக்தியே அழிந்து போய்விடும்.

சீ.—காரணமென்ன?

ம.—பல மகான்களும், ரிஷிகளும், யோகிகளும் பஜித்திருப்பதால் அம்மந்திரங்கள் ஓர் அற்புத சக்தியைப் பெற்றிருக்கின்றன. ஆதலால் சில மந்திரங்கள் ஸமஸ்கிருதத்திலேயே இருப்பதுதான் நல்லது. ஆனால் வேண்டுவோர் தக்க ஆசிரியர்களை அடைந்து அவற்றின் பொருளை உணர்ந்து கொள்ளலாம்.

சீ.—தியானத்துக்கு ஒவ்வொருவரும் எவ்வளவு காலம் செலவிட வேண்டும்?

ம.—பொறுமை யுள்ளவன் ஆண்டவனைக் காணும் வரையில் தியானம் செய்யவேண்டும்.

---

## ஈசுவர தத்துவம்

சீடன்—மகாத்மாஜி! தியானத்தின் தத்துவத்தைத் தாங்கள் அன்று விளக்கினீர்கள். தியானம் ஈசுவரனிடம் நாம் வைத்துள்ள நம்பிக்கையைப் பொறுத்திருக்கிறது என்றும் சொன்னீர்கள். அந்த ஈசுவரனின் தத்துவமென்ன? ஈசுவரன் என்றால் யார்? இதைத் தயவு செய்து தெளிவு படுத்த வேண்டும்,

மகாத்மாஜி—அன்பனே! சத்தியம் தான் ஈசுவரன் அல்லது கடவுள். சத்தியம் தான் ராமர், நாராயணன், ஈசுவரன், குதா (அல்லா) எல்லாம். ஸ்ரீயுத நரஸிம்ம மேதா கூறும் வண்ணம் தங்கத்தை வெவ்வேறு ரூபமாக அடித்தாலும் எல்லாம் தங்கமாகவே இருப்பது போல் தான் ஈசுவரனுமிருக்கிறார்.

சீ.—அவரை யாராவது அடைந்திருக்கின்றார்களா?

ம.—ஆஹா! துளசி தாஸர், சைதன்யர், ராமதாஸ் முதலியோரை நாம் எங்ஙனம் மறக்க முடியும்? எண்ண முடியாத ஒன்றை வர்ணிக்கின்றோம்; தெரியாத ஒன்றைக் காண முயல்கின்றோம்; நாம் உயிருடனிருப்பதும், நமது பெற்றோர்கள் உயிருடனிருப்பதும், நமது முன்னோர்கள் உயிருடனிருந்ததும் உண்மையாயின், இச் சிருஷ்டிக்கெல்லாம் மூலகர்த்தா ஒருவர் இருந்து தான் ஆகவேண்டும். அவர் இல்லை என்றால் நாமும் இல்லைதான். ஆதலால் நாம் எல்லோரும் சேர்ந்து ஈசுவரனைப் பரமாத்மா, விஷ்ணு, சிவன், ஜிஹோவா, ராமர், அல்லா முதலிய பல பெயர்களைக் கொண்டு அழைக்கிறோம். அவர் ஒருவராகவும், பலராகவு மிருக்கிறார். அவர் அணுவுக்கு அணுவாகவும், ஹிமாலயத்தை விடப் பெரிதாகவு மிருக்கிறார். அவர் கடலின் ஒரு துளியிலுமிருக்கிறார், ஏழு கடலும் சேர்ந்தாலும் அவரை மறைக்க முடியாது. அவரை அடையப் பக்தியே தேவை. களங்கமற்ற பக்தியே அவசியம். உள்ளன்பான பக்தியே வேண்டும். கடவுள் இல்லை என்று சொல்பவரை நான் அறைகூவி அழைத்து, "கடவுள் இருக்

கிருர் ; இருந்தார் ; இனியும் இருப்பார்" என்று எத்தனை தடவை வேண்டுமானாலும் சொல்வேன்.

சீ.—மகாத்மாஜி! இப்படிப்பட்ட ஈசுவரனின் தன்மை என்ன?

ம.—என்னைப் பொறுத்த மட்டில் ஈசுவரன் என்பது சத்தியம் அல்லது உண்மைதான். ஈசுவரன் என்பது சன்மார்க்கம்; ஈசுவரத் தன்மை அஞ்சாமையே. ஈசனே விளக்கும், வெளிச்சமும். நமது மனச் சாக்ஷியே ஈசன்.

சீ.—அப்படியானால் இந்த இடத்திலோ அல்லது அந்த இடத்திலோ, இந்தக் கோயிலிலோ அல்லது அந்தக் கோயிலிலோ அவரைக் காண முயல்வது மடமை யல்லவா?

ம.—ஆமாம், மடமை தான். கடவுள் காசியிலுமில்லை, ராமேசுவரத்திலுமில்லை. கடவுள் நம் ஒவ்வொருவரிடமும் குடி கொண்டிருக்கிறார். "உலகில் இயங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயில்." நாம் நமது அறிவை வளர்த்து, ஞானத்தைப் பெருக்கி, அந்த ஞானக் கண்ணை உள்ளே திருப்பி ஆண்டவனைக் காணவேண்டும்."

சீ.—கடவுளுக்குத் தொண்டு செய்வது எப்படி?

ம.—கோயில்களுக்குச் சென்று, தேங்காய் உடைப்பதோ, கற்பூரம் கொளுத்துவதோ ஒரு நாளும் கடவுள் தொண்டாகாது. ஒவ்வொரு உயிரும் ஈசுவர ஸ்வரூபமாதலால் உயிர்களுக்குத் தொண்டு செய்வதே கடவுள் தொண்டாகும். தேசப் பணியே தெய்வப்பணியாகும். ஒருவர் கோயிலுக்குட் சென்று, தேங்காய் உடைத்துவிட்டு வெளியே வருகையில், ஏழை யொருவன் தனது இரு கைகளையும் நீட்டிக் கேட்கையில், தங்கள் கையிலுள்ள தேங்காய்த் துண்டில் சிறிதளவும் கொடுக்க மறுக்கும் பேர்வழிகள் கோயிலுக்குச் செல்வதால் யாது பயன்? கோயிலுக்குச் சென்று கல்லில் முட்டிக் கொள்பவர்கள் உலகில் நடமாடும் கோயில்களாகிய ஒவ்வொரு உயிருக்கும் ஏன் தொண்டு செய்யக் கூடாது?

## அன்பின் மகிமை

நினைவுடனே அல்லது நினைவில்லாமலோ தினசரி வாழ்க்கையில் நாம் ஒருவருக்கொருவர் அஹிம்ஸையைத் தான் அனுஷ்டித்து வருகிறோம். நன்கு அமைந்த சமூகங்களெல்லாம் அஹிம்ஸை என்ற நீதி மீதே நடந்து வருகின்றன. அழிவின் மத்தியில்தான் எல்லா உயிரும் தழைத்திருக்கின்றன என்பதை நான் கண்டு கொண்டிருக்கிறேன். ஆகவே அழித்தலை விட உயர்ந்த தர்மம் ஒன்று உலகில் இருக்கவேண்டுமென்பதையும் நான் உணர்ந்தேன். இந்த உயர்ந்த தர்மத்தின் கீழ்த்தான் நாம் உயிர் வைத்துக்கொண்டு வாழ முடியும். அந்த தர்மத்தைத்தான் நாம் தினந்தோறும் கைப்பிடிக்க வேண்டும்.

உங்கள் எதிரிகளை நீங்கள் அன்பினால் வெல்லுங்கள். இந்த வழியில்தான் நான் எனது வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறேன். இதனால் என்னுடைய கஷ்டங்களெல்லாம் தீர்ந்து விடுகின்றன என்பது அர்த்தமல்ல. அழித்தல் என்னும் தர்மத்தினால் அதர்மம் ஏற்படுகின்றது. அன்பினால் சகலமும் நிறைவேறுகின்றது. அஹிம்ஸையைக் கொண்டு இந்தியாவில் நாங்கள் பெரிய போராட்டத்தையே நடத்திப் பார்த்துவிட்டோம். இதனால் எனது அஹிம்ஸா தர்மம் இந்தியாவிலுள்ள முப்பது கோடி மக்களின் மனத்திலும் ஊறிப்போய் விட்டது என்று என்னால் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று மட்டும் நான் சொல்வேன். மற்ற தத்துவங்களை விட அஹிம்ஸா தத்துவம் இந்தியாவில் சீக்கிரமாகவும், அதிகப் பேர்களிடையேயும் பரவியிருக்கின்றது.

மனதை அஹிம்ஸை நிலையில் நிறுத்த விசேஷ முயற்சியும், பயிற்சியும் வேண்டும். தினந்தோறும் அதை நாம் மனதில் கொண்டு அப்பியசிக்க வேண்டும். கையினால் ஒருவனை அடிக்காமல் இருந்துவிட்டு "நான் சிறந்த அஹிம்ஸா தர்மி" என்று சொல்லிக்கொள்ள முடியாது. மனதும், உடலும் சேர்ந்து ஒத்துழைத்தாலொழிய அஹிம்ஸை ஒரு நாளும் வெற்றி பெறாது. மனோ, வாக்கு,

காயம் மூன்றினாலும் அஹிம்ஸையை அனுஷ்டிப்பவனே சிறந்த அஹிம்ஸா தர்மியாகின்றான். இந்நிலையை அடைய ஒருவன் மனதில் பெரும் போராட்டம் நிகழும். கோபித் துக் கொள்ளும் சக்தி என்னிடம் இல்லை என்பதல்ல; ஆனால் கோபம் வரும்பொழுதெல்லாம் அதை நான் அடக்கி, ஜெயித்து விடுகிறேன்.

எது எப்படியாயினும் இடைவிடாமல் அஹிம்ஸா தர்மத்தைப் பின்பற்ற வேண்டுமென்ற போராட்டம் என் மனதிலிருந்து கொண்டே இருக்கின்றது. இந்தப் போராட் டத்தினாலேயே மனிதன் மன வலிமையையும், மனத்தூய்மை யையும் பெறுகின்றான். சத்தியத்தையும், அஹிம்ஸையையும் நாம் கைவிடுவதில்லை என்ற பிரதிக்ஞையோடு நாம் வாழ்க்கை யை நடத்தினால் இறுதியில் நாம் வெற்றி பெறுவோம்.

மனித வர்க்கம் அன்பெனும் தர்மத்தைக் கடைப் பிடித்து நிற்குமோ, நிற்காதோ அது எனக்குத் தெரியாது. ஆனால், நான் அதனால் கலக்கமடைய மாட்டேன். நாம் ஒப்புக்கொண்டாலும் சரி, ஒப்புக்கொள்ளாவிடினும் சரி ஆகர்ஷண சக்தி எப்படி வேலை செய்து கொண்டிருக்கிறதோ அப்படியே இந்த அஹிம்ஸா தர்மமும் வேலை செய்து கொண்டேயிருக்கும். விஞ்ஞான சாஸ்திரி தானாகவே புதிய புதிய ஆராய்ச்சிகளைக் கண்டுபிடிப்பது போன்று இந்த தர்மத்தை அனுஷ்டிப்பவனும் புதிய புதிய அற்புதங்களை யெல்லாம் கண்டு பிடிப்பான். அன்பெனும் தர்மத்தை நமக் குக் கண்டு பிடித்துத் தந்த மகானுபாவன் உலகிலுள்ள எந்த விஞ்ஞான சாஸ்திரியையும் விட மேம்பட்டவன். அந்த தர்மத்தின் அற்புதங்களை நாம் காண முடியவில்லை என்றால் அதற்கு நாம் அதனை ஆராயாததே குறை. இந்த தர்மத் தைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க, பேசப் பேச, எழுத எழுத, நான் வாழ்வின் மகிழ்ச்சியைக் காண்கின்றேன். அத னால் எனக்கு மனச் சாந்தி யுண்டாகின்றது. இயற்கையின் அற்புதங்களெல்லாம் எனக்குப் புலனாகின்றன. அதைப் பற்றி வர்ணிக்க நான் அசக்தனாயிருக்கிறேன்.

# அஹிம்ஸை

நான் அஹிம்ஸையே நிரம்பியுள்ளவன். அஹிம்ஸையும், சத்தியமும் எனது இரு காற்றுப்பைகளாவன. அவைகளின்றி யான் உயிர் தரிக்க முடியாது. அஹிம்சை மகா சக்தி பெற்றதென்றும், மனிதன் சிறுமையுடையவனென்றும், ஒவ்வொரு சமயமும் யான் தெளிவாகப் பார்க்கின்றேன். காட்டில் வசிப்பவன் மகா தயாளுவாயிருந்தும், ஹிம்ஸை உணர்ச்சி பெற்றவனாகவே யிருக்கின்றான். ஒரு மூச்சு இழுக்கும்போதுகூட ஹிம்ஸைக் கிருத்யங்கள் செய்கின்றோம். நமது சரீரமே ஓர் கசாப்புக் கடையாகும். ஆதலால் இந்த சரீரத்தினின்று விடுபடுபவனுக்கே சாசுவத இன்ப நிலையான மோக்ஷம் கிட்டுகின்றது. மோக்ஷத்தைத் தவிர இதர இன்பங்களெல்லாம் அழிவடைவன.

அஹிம்ஸை ஓர் க்ஷத்ரியனின் தர்மம். மஹா வீரன் ஓர் க்ஷத்ரியன்; புத்தன் ஓர் க்ஷத்ரியன்; ராமனும் கிருஷ்ணனும் க்ஷத்ரியர்கள். அவர்களுடைய பெயரை நிலைநாட்டவே அஹிம்ஸையைப் போதித்து வருகின்றோம். ஆனால் இன்று அஹிம்ஸை கோழை வைசியர்களிடையே இருப்பதால் அதன் பெருமை குறைந்திருக்கிறது. மன்னிப்பதின் உச்ச ஸ்தானம் அஹிம்ஸையே யாகும். தைரியவான் தான் மன்னிக்கும் ஸ்வபாவமுடையவன். பயமில்லாம லிருப்பவனாலேயே அஹிம்ஸையை அனுஷ்டிக்க முடியும்.

அஹிம்ஸையின் அடிவேரை ஆராய்ந்து பார்ப்போம். தன்னலம் துறப்பதே அஹிம்ஸை. சரீரத்தினிடத்துள்ள பற்றுத் துறந்து விடுதலையடைவதே தன்னலம் விடுவதாகும். ஒரு மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பெரியதும் சிறியதுமாகிய பல மிருகங்களைக் கொன்று கொண்டிருப்பதை ஓர் மகான் பார்த்தார். அவனுடைய அறியாமையைக் கண்டு திடுக்கிட்டார். அழியும் உடலிலுள்ள ஆத்மா சாகாதது என்று அவன் உணராததற்கு இரங்கினார். நிரந்தரமான உத்தமச் சுவையை அறியாது, அழியும் உடற் சுவைக்கு

ஆளாகி யிருப்பவனைப் பார்த்துப் பரிதபித்தார். தன்னைத் துறப்பதே சிறந்த தருமம் என உபதேசிக்கத் தொடங்கினர். ஒரு மனிதன் தன்னை உணர வேண்டுமாயின் சரீரப் பற்றுத லற்று சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதை உணர்த்தினர். உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளும் அவனிடம் பயப்படாம லிருக்கவேண்டும். அதாவது அவன் அஹிம்ஸை மார்க்கத்தில் ஈடுபட வேண்டுமென்பதை உணர்த்தினர்.

அகிம்ஸையின் திருக்கோயிலில் உறைபவர் பேடிகளா யிருப்பதைக் காணவே நான் வருந்துகின்றேன். அகிம்ஸா தர்மம் பேடித்தனத்தைச் சார்ந்ததல்ல. சக்தியற்ற தன்மையைச் சார்ந்ததல்ல. அடக்க முடியாத சக்தியே அகிம்ஸை யாகும். அதனுடைய அபாரமான பிரகாசத்தைக் கண்டு நாம் அணுகவும் பயப்படுகின்றோம். நம்மில் சிலருக்குத் தான் அவனுடைய ஒளி புலனாகின்றது. அடக்க முடியாத ஆத்மாவின் தனிக் குறைவே அகிம்ஸையாகும். அது பல நற்குணங்களுக்கு அடிப்படையாகவும் இருக்கின்றது. பகுத்தறிவு, துறவு, தவம், சமத்வம், அறிவு முதலிய பல அகிம்ஸையின்மீது கட்டப்பட்டுள. தைரிய சாலிகளின் வழி அகிம்ஸையே யன்றி பயப்படுவரின் ஆயுதமல்ல.

ஹிம்ஸை லவலேசமாவது ஒரோர் காரியங்களிலும் இருப்பதற்காக வருந்துகிறேன். கர்மத்தினல் தான் பரித்யாகம் ஏற்படுகின்றது. இந்தச் சரீரம் பாபகரமானது. ஆனல் இந்தச் சரீரத்தின் மூலமாகவே ஆண்டவனை அடைய விரும்புகின்றோ மல்லவா?

---

## சத்திய சமாஜம்

இந்தியா எண்ணிறந்த சமயங்களும், மதங்களும், மதக் கோட்பாடுகளும் நிறைந்த தேசம். ஆகவே சன்மார்க்க நெறியைக் கடைப்பிடித்தொழுக எண்ணியுள்ள தொண்டர்கள் தங்கள் நடத்தையைச் சீர்திருத்திக்கொள்ள எந்த மதத்தைப் பின்பற்றுவதென்பது தெரியாமல் திகைத்து நிற்கின்றனர். இச்சந்தர்ப்பத்தில் தொண்டரின் மதம் எதுவாயிருக்க வேண்டுமென்பதைப்பற்றி வற்புறுத்தி எனக்கொரு நண்பர் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :—

"பல பெயர்களைக் கொண்ட மதங்களும், தொண்டர்கள் பின்பற்றவேண்டிய மதமும் ஒன்றேயல்ல. எல்லா மதங்களும் சத்தியம் அல்லது உண்மையைப் போதிக்கின்றனவென்பது வாஸ்தவம். சத்தியமே அம்மதங்களின் சாரமாகவுமிருக்கின்றது; ஆனால் சத்தியமென்பது அந்த மதங்களுடன் சேர்ந்த ஒரு பாகமல்ல. பல மதங்களுள் சத்தியமும் ஒன்று என்று சொல்ல முடியாது; ஆனால் எல்லா மதங்களையும் கடந்து யாவற்றினும் சிறந்ததாய், உன்னதமானதாக விளங்குகின்றது சத்திய மதம். மதங்களுக்கெல்லாம் குரு சத்தியமே: மதங்களுக்கெல்லாம் தலையானது சத்திய மதமே.

உலகிலுள்ள பல்வேறு மதங்களில் அடங்கியிருக்கும் உண்மையை ஜனங்கள் உணர்ந்து, நடப்பார்களானல் மதச் சண்டைகள் இந்நாட்டிலிருக்குமா? எம்மதமும் சம்மதமே என்ற உணர்ச்சி இந்நாட்டில் அந்தக்ஷணமே பரவிவிடாதா? மதத்தின் பெயரால் அவ்வப்பொழுது நிகழும் இரத்தம் சிந்தப்படும் சம்பவங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுமன்றோ? அப்பொழுது நாட்டில் சாந்தியும், சமரஸமும் ஓங்கி நிற்குமன்றோ? மதங்களுக்கெல்லாம் தலைமையாக விளங்கும் இந்த சத்தியத்தைத் தான் யாவரும் தழுவி நிற்க வேண்டும். சத்திய மதம், ஜாதி, மத, நிறபேதங் காணாதது. ஆகவே உலகத்தவர் எல்லோரும் சத்திய மதத்தினராயிருக்க வேண்டும். சத்தியத்தின் தத்துவத்தைக் கண்டறிந்து

வர்கள், தங்கள் சொந்த மதத்தினின்றும் பிற மதங்களுக்கு மாறும் எண்ணத்தை உதைத்துத் தள்ளுவராயினும், சத்திய மதத்தில் சேரச் சற்றும் தயங்கார். சத்திய மதத்துக்கு ஒவ்வொருவரும் மாறத்தான் வேண்டும். சத்தியமென்னும் விளக்கைக் கொண்டே இருள் படர்ந்துள்ள நமது ஹிருதயத்தை ஜோதி மயமாக்க வேண்டும். சத்தியமென்னும் பரிசுத்த நீரைக் கொண்டே நமது மன மாசுகளைக் கழுவித் தள்ள வேண்டும்; சத்தியத்தினலேயே நமது திருஷ்டியையும், சிந்தையையும் நன்னெறியில் திருப்ப வேண்டும். இத்தகைய காரியங்களைச் செய்யவே ஒவ்வொருவனும் மனதார விரும்புகின்றான்.

ஹிந்து மதத்தைச் சேர்ந்த ஒருவன் இஸ்லாமிய மதத்தில் சேருவதை விரும்ப மாட்டான். ஆனல் இஸ்லாமிய மதத்திலுள்ள உண்மையைக் கட்டி அணைக்க அவன் எந்நாளும் பின் வாங்கமாட்டான்; அதன் உண்மையை ஆராய்ந்தறிய அவன் ஆசை கொள்ளுவான். உலகம் முழுவதையும் ஒரே மதத்தின் குடைக்கீழ்க் கொண்டு வர வேண்டுமென்ற எண்ணம் பலிதமாக வேண்டுமானல், உலக மதம் சத்தியமே என்ற சித்தாந்தத்தை நாம் நிலைநாட்ட வேண்டும்.

அப்படியிருக்கையில் தொண்டர் தழுவி நிற்கவேண்டிய மதம் எது? அது சத்தியத்தைத் தவிர வேறு எதுவாயிருக்க முடியும்? சத்தியத்தை அவர்கள் கைக்கொண்டு நடக்க வேண்டியதன் அவசியத்தை அதிகமாக வற்புறுத்த வேண்டியதில்லை. தொண்டருக்கு உயிரைவிடச் சத்தியமே பிரதானமானது. உயிரைக் கொடுத்தாயினும் சத்தியம் தழைக்கும்படி பார்ப்பதே தொண்டரின் கடமை. தன்னை எவன் பின்பற்றுகின்றானே அவனது ஆன்ம இருளைப் போக்குவது சத்தியமே; அவனது உடலையும் அது தூய்மைப்படுத்தும். "ஆன்மா உடலின் கண்" எனச் சொல்லப்பட்டுளது. அந்தக் கண் சத்தியமென்னும் வெளிச்சத்தினல் திறக்கப்படுமாகில் சத்தியத்தைப் பின்பற்றுபவனுக்கு உலகமே புதியதாகத் தோன்றும்.

"உன் உடலுக்கு வெளிச்சம் தருவது உன் கண்; ஆகவே உன் கண் வெளிச்சத்தைக் கண்டால் உடல் முழுதுமே வெளிச்சத்தில் ஆழ்ந்திருக்கின்றது; உன் கண் இருளிலாழ்ந்திருந்தால் உடலும் இருள் மயமாகிக் கிடக்கின்றது. ஆகவே வெளிச்சத்தை எப்பொழுதும் கைவிடாதே" என்றுன் இயேசு பெருமான்.

சத்தியத்தினுள் ஹிந்து மதம், இஸ்லாமிய மதம், கிறிஸ்தவ மதம் முதலிய சகல மதங்களும் அடங்கி யிருக்கின்றன. நற்கதியை அடைய விரும்புகிறவர்கள் சத்தியத்தையே நாடுவர்."

சத்தியத்தின் தத்துவத்தை நண்பர் அழகாக எடுத்துரைத்திருக்கிறுர். இப்பிரபஞ்சத்திலுள்ள நாம் அனைவரும் ஒருமனப் பட்டிருப்பதென்பது அசாத்தியம். சத்தியத்தை ஒவ்வொருவரும் ஒவ்வொரு நோக்கத்துடன் காண்பர். எல்லோரது மனச் சாக்ஷியும் ஒன்றுனதல்ல. ஆகவே தனிப்பட்ட ஒருவர் தமது நடத்தையைச் சீர்திருத்திக் கொள்ள சத்தியம் சிறந்த வழியாயினும், அந்த நடத்தையை யாவர் மீதும் அவர்களது விருப்பத்துக்கு விரோதமாகச் சுமத்துவது ஒவ்வொருவரது மனச்சாக்ஷியிலும் அநாவசியமாகத் தலையிட்டுத் துன்பம் விளைவிப்பதாகும். எல்லோருக்கும் மனச்சாக்ஷி யென்பதுண்டா? காட்டுமிராண்டிக்கு மனச்சாக்ஷி யிருக்கின்றதா? அவனது மனச்சாக்ஷி என்ன சொல்லுகின்றது? தன்னுடன் கூட வாழும் மானிடரைக் கிழித்துக் கொன்று தின்னும்படி அவன் மனச்சாக்ஷி கூறுவதையே பின் பற்றும்படி அவனை அநுமதிப்பதா? மனச்சாக்ஷி என்ற வார்த்தையின் உண்மையான பொருள் "உண்மை அறிவு." மனச் சாக்ஷிக்கு அகராதி கூறும் பொருள் வேறு. "எது சரியானது, எது தவறுனது என்பதைக் காணும் பகுத்தறிவும், இதைக் கொண்டு நடத்தையை மாற்றிக்கொள்ளுதலும்" என்றே அகராதி அறைகின்றது. பயிற்சிபெற்ற ஒருவனிடமே இத்தகைய மனச்சாக்ஷி இருக்க முடியும். அதாவது ஒழுங்கான வாழ்க்கையை நடத்தி, தன்

மனச் சாட்சியின் வண்ணம் நடக்க அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆனால் மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்காதவர்களிடையே கூட கௌரவமான அபிப்பிராய பேதங்கள் இருக்கவே செய்யும். ஆகவே நாகரிகம் வாய்ந்த ஒரு சமூகத்தில் ஒருவருக்கொருவருள்ள பேதங்களை சகித்துக்கொண்டு போகும் தன்மை யிருப்பதே சிறந்தது. அந்தஸ்து, பயிற்சி இவற்றைப் பொருட்படுத்தாமல் யாவரும் இந்த வழியைப் பின்பற்றி நடக்கலாம்.

---

## ஸ்திரீ ஸ்வதந்திரம்

நாம் நம்மை ஸ்வராஜ்யத்துக்கு அருகதை யுடையவர்களாகச் செய்துகொள்ள வேண்டுமானல் ஸ்திரீகளிடம், ஆண்கள் இப்பொழுது காட்டி வருவதைவிட அதிக மரியாதையும் கௌரவமும் காட்டி வரவேண்டும்; ஸ்திரீகளைப் பரிசுத்தத்தின் நிலைக்களன்களாக ஆடவர் பாவிக்கவேண்டும். ஸ்வதந்திரமின்றி வாழ்ந்து வரும் நமது ஸ்திரீகளின் நிலை எவ்வளவு வெட்கக் கேடானது?

ஸ்திரீகளை ஸ்வதந்திரமாக நடத்தும் விஷயம் ஆத்மார்த்தமானது. மனித இச்சையைத் திருப்தி செய்யவே ஸ்திரீகள் ஜென்மம் எடுத்திருக்கின்றனர் என்று நாம் நினைக்கும்படி ஒரு பெண்ணாவது இருக்குமளவும் நாமெல்லோரும் வெட்கித் தலை குனிய வேண்டியது தான். ஆண்டவனல் படைக்கப்பட்ட ஜீவராசிகளுள் மிகவும் உத்தமமானவள் பெண். நாம் மனிதத் தன்மையை விட்டொழித்து, மிருகங்களாக மாறி அவளை நமது காம ஆசையின் கருவியாக என்னுவதை விட ஆண் சமூகம் அழிந்து விடுவதே மேல் என எனக்குத் தோன்றுகிறது.

ஆனல் இந்த ப்ரச்னை இந்தியாவுக்கு மட்டுமே சொந்தமானதல்ல. இது உலகப் பிரச்னையாகும். காம இன்பம்

நிறைந்த நவீன சொகுசான வாழ்வை விட்டு, ராட்டையை அறிகுறியாகக் கொண்டிருக்கும் எளிய வாழ்வுக்குத் திரும்பும்படி ஆடவருக்கும், பெண்டிருக்கும் நான் உபதேசித்து வருகிறேன். இதற்குக் காரணம் விவேகத்துடன் எளிய வாழ்வைக் கைக்கொள்ளாவிடில், நாம் காட்டு மிராண்டித் தனத்துக்கும் கீழான நிலையை அடைவதைவிட வேறு விதியில்லை.

ஸ்திரீகளுக்கு நிரம்ப—பூராவாக—ஸ்வதந்திரம் வேண்டுமென்பதில் என்னை விட அதிகமாக வெறி கொண்டிருப்பவர்கள் எவருமிரார். கலியாணம் என்றால் என்னவென்று கூடத் தெரியாத குழந்தைப் பெண்களுக்குக் கலியாணம் செய்துவரும் கொடிய வழக்கத்தை நான் பலமாகக் கண்டிக்கிறேன். "கழுத்தில் தாலி யேறிய பின்பு, தன் புருஷனைப் பார்த்து, மாப்பாச்சி வைத்துக்கொண்டு விளையாடுவோமா" என்று கேட்கும் பச்சைக் குழந்தைக்குக் கலியாணம் முடிப்பது தர்மமா? பாலியத்திலேயே பெண்கள் விதவைகளாகி விடுவதையும், மனைவி இறந்தவுடனேயே ஆடவன் மற்றொரு மனைவியைக் கட்டிக் கொள்ளுவதையும் கண்டால் என் உடல் நடுங்குகின்றது. பெண்களுக்குக் கல்வியே போதிக்காமல், அவர்களை மடமையிலாழ்த்தி வைத்து, நல்ல ஆஸ்தி உள்ளவர்களுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதற்காகவே அவர்களைப் பெற்றோர்கள் வளர்ப்பதைக் கண்டால் என் மனம் அவதிப்படுகின்றது. வாழ்வின் ஆரம்பமும், முடிவும் கலியாணம் தானா? ஸ்திரீகள் தங்கள் சரீரத்தை அழகு செய்வதைப் போல் கேவலமானது வேறொன்று மில்லை. ஆடவனின் உள்ளத்தை மகிழ்விக்கவே இங்ஙனம் பெண்கள் ஜோடித்துக் கொள்ளுவதாகக் கூறப்படுகின்றது. ஆடவனின் காம ஆசையைத் தீர்க்கவே தாங்கள் பிறந்ததாகப் பெண்மணிகள் எண்ணுவதை விட்டொழிக்க வேண்டும். ஸ்திரீகள் பிரச்னையைத் தீர்க்கும் வழி ஆடவரை விடப் பெண்களிடமே யிருக்கின்றது. புருஷனின் மனதை மகிழ்விப்பதற்காகத் தன்னை அலங்கரித்துக்கொள்ள முடியாதென

ஒவ்வொரு மனைவியும் சொல்லிவிட வேண்டும். ஸ்ரீ ராம பிரானைத் திருப்தி படுத்துவதற்காகச் சீதாதேவி தன்னுடலை அழகு செய்து கொண்டனள் என்று சிந்திக்கவாவது முடியுமா?

---

## உடன்கட்டை யேறுதல்

ஸதி என்பவள் யார்? கணவனுடைய வாழ்நாட்களிலும், அவன் காலமாகிய பின்னரும் எவ்வொருவள் அன்பு, பணிவு இவைகளோடு தன்னலம் துறந்து ஊழியம் செய்கின்றாளோ, மனோ வாக்குக் காயங்களிலும் கற்புடன் இருக்கின்றாளோ அவளைத்தான் 'ஸதி' யென்று நம்முடைய முன்னோர் அழைத்தனர். கணவனிறந்தானென்று தன்னைத் தானே பலியிட்டுக் கொள்வது அறிவாகாது. அவ்வாறு செய்வது ஆத்மாவின் இரகஸ்யத்தை அறியாத மடமையாகும். ஆத்மா அழிவற்றது; மாறக் கூடாதது; உள்ளே ஒளிர்வது. உடலோடு அது மரித்து விடுவதல்ல; ஒரு கூட்டிலிருந்து இன்னொரு கூட்டிற்குப் பிரயாணம் செய்து கொண்டேயிருப்பது. உலகத்தின் தளை நீங்கும் வரை இவ்வாறு பிரவர்த்திக்கும் இயல்புடையது ஆத்மாவாகும். இந்த உண்மையைத் தான் பண்டைக் காலத்தில் கணக்கற்ற ஞானிகளும், யோகிகளும் கண்டறிந்து கூறினர். இப்போதும் பிரயத்தனிப்பவர்கள்கூட இந்த இரகஸ்யத்தை அறிந்து கொள்ளலாம். 'விஷயம் இவ்வாறிருக்க, தற்கொலை செய்து கொள்வதை எவ்வாறு ஆதரிக்க முடியும்?

விவாக மென்றால் இரண்டு சரீரங்களைப் பிணைத்து விடுவது மட்டுமல்ல. ஆத்மாக்கள் ஒன்றுபடுவதே விவாகமாகும். கல்யாண மென்பது ஜட சம்பந்தமாக இருக்குமாயின் புருஷனின் படத்தையோ, அல்லது மெழுகுப் பொம்மையையோ வைத்துக் கொண்டு மனைவியர் சந்தோஷப் படலாம். தன்னைத் தான் கொன்று கொள்வது

ஒன்றுக்கும் உதவாத காரியமாகும். அவ்வாறு கொன்று கொள்வதால் மாண்டவன் மீண்டு வருவானு? தன்னைத்தான் கொன்று கொள்வதால் உயிர் வர்க்கத்தினின்று ஒரு உயிரைப் போக்குவதுதான் கண்ட பலனுகும்.

விவாகமென்றுல் சரீர சம்பந்த மூலமாக உயிர்களைப் பிணைப்பதாகும். அதனுல் ஏற்படும் காதல், தெய்வீகக் காதல் ஏற்படுவதற்கும், உலகத்தின்மீது காதல் உண்டாவதற்கும் வழிகாட்டி யாகும். ஆதலால் தான் மீராபாய் பின்வருமாறு பாடினுள் :—

" பகவான் தான் எனது புருஷன்—
வேறெருவருமில்லை "

இதனின்று நாம் அறிவதாவது :—மிருக இச்சைக்காக விவாகம் நடப்பதாக ஸதி ஒருக்காலும் எண்ணமாட்டாள். ஆனுல் தன்னலமற்ற சேவையைச் செய்வதற்கும், அகங்காரத்தை அடக்கி புருஷனேடு தன்மயமாவதற்கும் விவாகம் இன்றியமையாததாக எண்ணுவாள். மயானத்தில் புருஷனுடைய சிதையில் ஏறிப் படுத்துவிடுவது சதி தர்மமல்ல. கணவன் தன்னைவிட்டுப் பிரிந்த பிறகு ஒவ்வொரு விநாடியும் பற்றற்ற வாழ்க்கையினுலும், தியாகத்தினுலும், துறவுத் தன்மையாலும், தன்னுடைய புருஷனுக்கும், அவனது குடும்பத்திற்கும், தாய் நாட்டிற்கும் சேவை செய்கின்றவள்தான் ஸதி. ஊண் உடை ஆசைகளையும், இந்திரிய போகங்களையும் அவள் அடியோடு வெறுப்பாள். குறுகிய குடும்ப பாரமோ, குடும்ப அலுவல்களோ, அவளை அடிமைப் படுத்தமாட்டா.

இத்தகைய ஸதி தனது புருஷனின் மரணத்திற்காக பிரமாதமாக துக்கப்படுவதற்கில்லை. தன்னுடைய புருஷனின் கொள்கைகளும் தர்மங்களும் என்றென்றும் நிலவும்படி பாடுபட்டு, அவனுடைய பெயர் சாகாது நிலைநிறுத்துபவளே சதியாவாள். யாரைக் கல்யாணம் செய்து கொண்டாளோ அவனது ஆத்மா அழிவடையவில்லை யென்றும்,

இன்னும் தன்னோடு இருப்பதாகவும் எண்ணுபவள் மறு மணத்தையும் கோர மாட்டாள்.

"இவ்வாறு வர்ணிக்கப்பட்ட சதியிடம் ஆசையோ, மிருக இச்சையோ இல்லையே, அவளுக்கு புத்திராபீஷ்டமே இருக்காதன்றோ, அப்படியிருக்க அவள் கல்யாணம் பண்ணிக் கொண்டதேன்?" என்று என்னைச் சிலர் கேட்கலாம். ஹிந்து சமூகத்தின் வழக்கப்படி கல்யாண மென்பது அவ ரவர்கள் இச்சையைப் பொறுத்ததாக இப்போது இல்லை. தடபுடல் நிறைந்ததான இந்த உலகத்தில் நற்குணமும், இந்திரிய அடக்கமும் ஏற்படுவதற்கு விவாகம் அவசியமானதா யிருக்கின்றது. ஆனால் நான் உலகில் கவனித்திருக்கிறபடி கல்யாண காலத்தில் கொஞ்ச நஞ்சம் மிருக இச்சை கொண் டிருந்தவர்கள் கூட, நாளடைவில் கற்பைப் பாதுகாப்பவர் களாக மாறியிருக்கின்றனர். என் இதைச் சொல்ல வந்தே னென்றால், நான் வருணித்த இந்த சதி தர்மம் வெறும் கற்பனையல்ல; இந்த உலகத்திலேயே அனுஷ்டிக்கக் கூடி யது என்று நிரூபிப்பதற்குத்தான்.

ஆனால் சாதாரண மனைவியாயிருந்து ஸதியாக மாறு பவள் தாயாகவும் ஆகக் கூடும். ஆதலால் ஏதேதோ விஷயங் களைக் கற்றறிந்து கொள்வதோடு குழந்தைகளை வளர்க்கும் விதங்களையும் அறிந்து கொள்வது அவசியமாகும். அப் போது தான் சிறந்த தேச சேவிகையாக ஆக முடியும்.

என்னென்ன விஷயங்கள் மனைவிக்காகச் சொன்னே னோ அவை புருஷனுக்கு முண்டு. தனது பக்தியையும், பிரிவற்ற அன்பையும் எவ்வாறு புருஷனிடத்து மனைவி செலுத்துகிறாளோ அவ்வாறே அவனுமிருக்க வேண்டும். ஒருவனுக்கு ஒரு படிக்கல்லும் இன்னொருவருக்கு வேறு படிக்கல்லும் போட்டு நிறுக்க முடியாது. ஆயினும் செத்துப் போன மனைவியோடு எந்தப் புருஷனாவது உடன் கட்டை யேறியதாக கேட்டிருக்கிறோமா? இல்லை. ஆதலால் புருஷ னின் சாவுக்காகத் தன்னைச் சிதைத்துக் கொள்ளும் விதவை

யின் தன்மை மூட நம்பிக்கையினுலான தென்றும், ஆணின் அகந்தையைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். ஏதோ ஓர் காலத்தில் உடன் கட்டை யேறுவதற்கு ஓர் அர்த்தமிருந்த தாகக் கூறுவதாயிருந்தாலும் அது மிருகத்தனமானது; இக்காலத்திற்கு ஒவ்வாதது என்றே கொள்ள வேண்டும். மனைவி புருஷனின் அடிமையல்ல. அவள் அவனது தோழி. அவனுடலில் பாதி அவள்; அவனுக்கு உதவுபவள். நட்புடையவள் அவள் தான். அவர்கள் ஒருவர்க் கொருவர் செய்து கொள்வது ஒரே மாதிரியாக இருப்பதே உலக ஒழுங்கு.

இத்தகைய உடன்கட்டை யேறும் வழக்கத்தை ஒருவரும் பின்பற்ற வேண்டாம். சாவிற்குத் துணிந்ததைக் கூட நான் போற்றவில்லையா என்று கேட்கலாம். இந்த விஷயத்தில் போற்ற முடியவில்லை. எவ்வளவோ அக்ரமஞ் செய்பவர்கள் கூட சாவதற்குத் துணிந்திருக்கிறார்கள். அதற்காக அவர்களைப் புகழ்கின்றோமா? இந்த ஒரு தற்கொலையை நான் வாயாரப் புகழ்ந்துவிட்டால் ஏதாவது ஓர் அறியாத ஸ்திரீ இதைப் பின்பற்றவும் அந்தப் பாவம் என் தலையில் ஏறவும் வேண்டுமா?

சத்வமானது சதி தர்மம். வெறுமனே செத்துப் போய்விடுவதால் இந்த ஸத்வத்தை அடைந்துவிட முடியாது. விடாமல் உழைப்பதனுலும், ஆத்மாவைப் பலி கொடுப்பதனுலுமே அந்த ஸத்வ நிலையை அடைய முடியும்.

---

## பற்றற்ற வாழ்வு

திருடாதிருக்கும் குணத்தோடு சேர்ந்தது பற்றற்ற வாழ்வு. அவசியமில்லாத போதும் அதன் சொந்தக்காரனுக இருப்பதற்காக ஒருவன் சொத்து வைத்திருப்பானுயின் அவனும் ஓர் திருடனே யாவான். வருங்காலத்திற்காக வைத்திருப்பது சொத்து. சத்தியத்தைத் தேடுபவனும்,

அன்பு வழியைக் கடைப்பிடித்தவனும், 'நாளைக்கு என்ன செய்வது' என்ற கவலையற்றவர்களாதலால், சொத்து வைத்துக்கொள்ள இடமில்லை. நாளைக்காக கடவுள் கொடுப்பதில்லை. அன்றன்று வேண்டியதை மட்டும் அவர் படைத்துக் கொண்டிருக்கிறார். அவருடைய கடாக்ஷத்தில் நாம் நம்பிக்கை வைத்திருப்போமாயின் அன்றாடம் வேண்டிய உணவையும் அவசியமான இதர தேவைகளையும் அவர் தருவார். எந்த சாதுக்களும், பக்தர்களும், இந்த நம்பிக்கையோடிருந்தார்களோ அவர்கள் தங்கள் அனுபவத்தால் இந்த உண்மையை அறிந்திருந்தார்கள்.

'அன்றாடம் வேண்டியதையே பகவான் தந்திருக்கின்றார். அதற்கு மேல் தரவில்லை' என்பதை நாம் நமது அறியாமையினாலோ அல்லது அறிய விரும்பாத தன்மையினாலோ உணர்ந்து கொள்ளாமலிருக்கின்றோம். பணக்காரர்களிடம் மிதமிஞ்சிய பொருள்கள் இருக்கின்றன. அவ்வளவு அவர்களுக்குத் தேவையில்லை. அவைகளை அதிகமாக அவர்கள் கவனிப்பதுமில்லை. ஆதலால் பொருள்கள் வீணாகின்றன. ஆனால் அதே பொருள்களை வேண்டி லக்ஷக் கணக்கான மக்கள் பட்டினி கிடந்து சாகின்றார்கள். அவனவனுடைய தேவைகளை மாத்திரம் ஒவ்வொருவனும் வைத்துக் கொண்டிருப்பானாயின், உலகில் ஒருவருக்காவது தேவை இருக்காது; எல்லோரும் சந்துஷ்டியாய் வாழ்வார்கள். இது அனுஷ்டிக்கப்படாததால் ஏழைகளுக்கு எப்படி மனக் கிலேசங்கள் உண்டாகின்றதோ அவ்வாறே செல்வவான்களும் கிலேசமடைகின்றனர்.

தங்களுடைய வயிறு நிரம்பத்தக்க அளவு கிடைத்திருப்பினும் ஏழைகள் சந்துஷ்டி யடையாதிருக்கின்றனர். அவர்களுக்கு வேண்டிய அளவு அவர்களுக்கு கிடைக்கவே வேண்டும். அவர்களுக்கு அந்த அளவு கிடைக்குமாறு செய்வது சமூகத்தின் கடமையாகும். உலகத்தில் சந்துஷ்டி பரவி யிருப்பதற்காக பணக்காரர்கள் இந்தக் காரியத்தை தலைமேற் போட்டுக் கொள்ளவேண்டும். அவர்கள் தங்க

ளிடம் ஓர் குறிப்பிட்ட அளவுக்குப் பொருள் வைத்துக் கொண்டிருப்பார்களாயின் ஏழைகளுக்குச் சோறிடலாம்; மேலும் அந்த ஏழைகளைப் போலவே 'போதுமென்ற' ஓர் மனோபாவத்தையும் அடையலாம்.

---

## காந்திஜி காட்டுக்குப் போவாரா ?

"நான் ஒரு பிராம்மணன்; வைத்தியத் தொழில் நடத்தி வருபவன்; ரொம்ப வயதானவன். இந்த மூன்று ஹோதாவிலும் நான் தங்களுக்குச் சில புத்திமதிகள் கூற விரும்புகிறேன். அதில் விவேகமும், உண்மையும் இருப்பதாகத் தங்களுக்குப் பட்டு, தங்கள் மனதுக்குப் பிடித்தால் அதன்படி நடவுங்கள்.

"இந்த லோகத்தில் நீங்கள் எல்லாவற்றையும் கண்டறிந்து விட்டீர்கள்; உலகத்தைப் பற்றி ரொம்ப வாசித்திருக்கிறீர்கள். ஆகவே லோகத்தைப் பற்றிய அனுபவம் உங்களிடம் நிரம்ப இருக்கின்றது. உங்களை "அனுபவச் சுரங்கம்" என அழைக்கலாம். ஆனால் அழியக்கூடிய இந்த உலகத்தில், தான் எடுத்துக் கொண்ட காரியத்தை எவனும் தன் வாழ்நாளில் முடிப்பதில்லை. உதாரணமாகப் பாருங்கள். புத்தரை எடுத்துக்கொள்வோம். அவர் பெரிய ஞானிதான். ஆயினும் இந்தியா பூராவையும் புத்த மதத்தின் பக்கம் திருப்ப அவரால் முடியாமல் போய் விட்டது.

"சங்கராச்சாரியார் உயர்ந்த ஞானம் படைத்தவர்தான். ஆனால் இந்தியா முழுவதையும் அவரால் வேதாந்த மயமாக்க முடிந்ததா? முடியவில்லை. கிறிஸ்து நாதர் விசேஷப் பாரமார்த்திகத் தன்மைப் படைத்தவர்தான். அப்படி இருந்தும் யூதர்கள் எல்லோரையும் அவரால் கிறிஸ்தவ மதத்திற்குள் கொண்டுவர இயலவில்லை, ஆகவே தாங்கள் எடுத்துக் கொண்ட வேலையைப் பூர்த்தி செய்யத் தங்களால் முடியு

மெனத் தாங்கள் கருதினுல், அது வெறும் கனவுதான் என்ப தையும் நான் சொல்லி விடுகிறேன்.

"இந்த உலகம் சோதனைகளும், துன்பங்களும், துக்கங் களும் நிறைந்ததாகும். ஆதலால் இந்த உலக வியவகாரங் களில் எவனொருவன் அதிகமாக ஆழ்ந்து, உழல்கின்றுனே, அவன் மன நிம்மதியை அடைவதில்லை; பாரமார்த்திக உணர் வையும் அவன் இழந்து விடுகின்றுன். இக்காரணத்தைக் கொண்டுதான் முன்னுளில் மகான்களும், மகாத்மாக்களும் உலகக் கவலைகள், விசாரங்கள், துன்பங்கள் இவற்றினின்றும் விடுபட்டு, சாந்த நிலையையும், நிர்மலமான மன நிலையையும் அடைய முயன்று, பேரானந்தத்தை அனுபவித்து வந்தனர்.

"ஆகவே நீங்களும் காட்டுக்குப் போய், ஒரு குகைக் குள் இருந்துகொண்டு மனத்தை அமைதியில் நிறுத்தி, ஆண் டவனைக் குறித்து தியானம் செய்வதே தகுதியானது. இனி மேல் தங்களது வாழ்நாட்களை இத்துறையில் திருப்புவதே உத்தமம். தங்களைத் தாங்கள் அறிந்துகொள்ளவும் இதுவே மார்க்கம். இனிமேல் தங்கள் உடல் உலக விசாரங்களைத் தாங்காது.

"தங்களைப் பணிந்து கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் ராஜீய வேலையில் ஈடுபடவே வேண்டாம். தங்கள் மனம் தங் களைச் சும்மா விருக்கவிடாதென்றுல், இந்தப் பூமியில்—ரிஷி களும், மகான்களும், ஞானிகளும் பிறந்த இந்தத் தாய்நாட் டில்—தாங்கள் தங்கள் சகோதர இந்தியர்களைப் பாரமார்த்தி கர்களாக ஆக்க முயலுங்கள். ஒருவன் தன்னைத் தானறித லின் பாடத்தை அவர்களுக்குப் போதியுங்கள். இப்படிச் செய்வதால் இந்தப் பூலோக சாம்ராஜ்யத்தை அடைவதை விடத் தாங்கள் மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைவீர்கள்."

அக் கடிதத்திற்கு காந்திஜி விடுத்த பதில் பின் வருமாறு:—

என்னுடைய வாழ்வின் காரியமென்ன என்பதை விளக்க இக்கடிதம் காரணமாக விருப்பது குறித்து நான்

சந்தோஷிக்கிறேன். நண்பர் குறிப்பிட்ட மகான்களின் வேலையை அவர் நன்கு உணர்ந்து கொள்ளாததால் தான் அவர் மனம் குழம்பிக் கிடக்கின்றது. அவர்களையும், என்னையும் ஒப்பிட்டுப் பேசுவது அசம்பாவித மாகும். புத்தரின் லக்ஷியம் என்ன? நிர்வாண நிலையை அடைய வேண்டுமென்பதே. அவர் அதை அடையவில்லையா என நண்பரைக் கேட்கிறேன். அவர் அதை அடைந்தார் என சரித்திரம் கூறுகின்றது. ஒரு புனிதமான விஷயத்தைப் பற்றி விளக்குகையில் மற்றொருவரை தன் பக்கம் மாற்றுவதென்பது வேறு விஷயமாகும். தாம் எதற்காக வந்தாரோ அந்த வேலையை இயேசுநாதர் சிலுவையிலேயே பூர்த்தி செய்தார் என விவிலிய (கிறிஸ்தவ) வேதம் கூறுகின்றது. "என் வேலை முடிந்தது" என்று அப்பொழுது இயேசு கூறினாராம். மேலும் மேற்படி மகான்களின் வேலைகளெல்லாம் அவர்கள் மறைந்த பின்னர் நின்றுவிடவில்லை. அவைகள் இன்னமும் உயிருடனிருந்து வேலை செய்துகொண்டே யிருக்கின்றன. அவ்வேலையின் உண்மையான அம்சம் என்றும் அழியாமலேயிருக்கும்.

மகான்களுடன் ஒப்பிடும்படியான அவ்வளவு யோக்யதையை நான் பெற்றவனல்ல. அவர்களது திருநாமங்களை உச்சரித்துவிட்டு அதே மூச்சில் அடியேன் பெயரைச் சொல்வதற்குக்கூட நான் அருகனல்ல. நான் ஒரு சாதாரண மனிதன்; சத்தியத்தைத் தேடி அலைபவன்; சத்தியக் கடவுளைத் தரிசிக்க ஆவல் கொண்டு நிற்பவன். என்னையே நான் அறிய வேண்டுமென்ற ஆசையால் நான் துடிக்கிறேன். இந்த வாழ்விலேயே மோக்ஷத்தை அடைய வேண்டுமென்றும் தவம் கிடக்கிறேன்.

சதையின் கட்டினின்றும் என் ஆத்மாவைப் பிரிக்கவே நான் முயல்கின்றேன். நான் செய்துவரும் தேசீய சேவை இம்முயற்சியின் ஒரு பங்காகும். இப்படிப் பார்க்கையில் எனது ஊழியம் சுயநலம் நிறைந்தது எனவும் கருதப்படலாம். அழியக்கூடிய தன்மை வாய்ந்த இப்பூலோக சாம்ராஜ்

யத்தில் எனக்கு விருப்பமே கிடையாது. மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடையவே நான் முயல்கின்றேன்.

எனது வாழ்வின் லக்ஷியத்தை அடைய நான் காட்டுக்குப் போக வேண்டியதில்லை; மூக்கைப் பிடித்துத் தியானம் செய்ய வேண்டியதில்லை. குகையில் வசிக்கும் ஒருவன் ஆகாயக் கோட்டைகள் கட்டலாம். ஆனால் ஜனக மஹாராஜனைப் போன்று அரண்மனையில் வசிக்கும் ஒருவர் ஆகாயக் கோட்டைகள் கட்ட வேண்டியதில்லை; சிந்தனை என்னும் சிறகுகளின் துணையால் இவ்வுலகத்தின் மீது பறந்து திரியும் குகை வாசிக்கு மனச் சாந்தி ஏது? ஆனால் எல்லா சொகுசுகளுக்கும் மத்தியிலே வசித்தாலும் ஒரு ஜனக மஹாராஜன் மனச் சாந்தியை அடைவான். என்னைப் பொறுத்த மட்டில், ஓயாது, இடைவிடாது தேச சேவை செய்து அதன் மூலமாக மனித வர்க்கத்துக்கும் சேவை செய்வதே முக்தி நிலைக்கு மார்க்கமாகும்.

இந்தப் பிரபஞ்சத்தில் உயிர் பெற்றிருக்கும் எல்லாவற்றினுடனும் நான் என்னை ஐக்கியப் படுத்திக் கொள்ள விரும்புகிறேன். கீதை வாக்குப்படி நான் நண்பனையும், பகைவனையும் ஒரே மாதிரியாகப் பாவித்து அவர்களுடன் வசிக்க விரும்புகிறேன். ஆகவே ஒரு முஸல்மானோ அல்லது ஒரு கிறிஸ்தவனோ அல்லது ஒரு ஹிந்துவோ என்னை வெறுத்துத் தள்ளி, என்னைப் பகைத்துக் கொண்டாலும் அவனிடம் அன்பு காட்டி, அவனுக்குச் சேவை செய்ய நான் விரும்புகிறேன்.

ஆகவே சாசுவதமான சுதந்திரத்தையும், சாந்தியையும் அடைய நான் செய்துவரும் யாத்திரையில் எனது தேசாபிமானம் ஒரு பாகமாகும். ஆதலால் எனக்கு மதமும் ராஜியமும் ஒன்றுதான். மதமில்லாத ராஜியத்தை நான் வெறுத்துத் தள்ளுகிறேன். மதத்தைக் கைவிட்ட ராஜியம் மரணக் கூண்டுக்குச் சமமாகும். ஏனெனில் அது ஆன்மாவையே கொன்றுவிடுகின்றது.



# சங்கு நூல்கள்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| **மகாத்மா காந்தி எழுதிய** | | | |
| சத்திய சோதனை (முதல் பாகம்) .... | 1 | 8 | 0 |
| சத்திய சோதனை இரண்டாம் பாகம்) .... | 2 | 0 | 0 |
| இல்லறமும் பிரும்மசரியமும் .... | 0 | 6 | 0 |
| அனாசக்தி யோகம் .... | 0 | 4 | 0 |
| ஆரோக்கிய வழி .... | 0 | 4 | 0 |
| மகா தியாகம் .... | 0 | 4 | 0 |
| நீதி தர்மம் .... | 0 | 2 | 0 |
| கீதா போதனை .... | 0 | 2 | 0 |
| உத்தம வாழ்க்கை .... | 0 | 2 | 0 |
| ஹிந்து தர்மம் .... | 0 | 2 | 0 |
| **ரோமேன் ரோலண்டு எழுதிய** | | | |
| மகாத்மா காந்தி (புதிய பதிப்பு) .... | 0 | 4 | 0 |
| **வில்லியம் தர்ஸ்டன் எழுதிய** | | | |
| இல்லற மகா ரகஸியம் .... | 0 | 4 | 0 |
| **பகதூர்ஜி கமிட்டி அறிக்கையான** | | | |
| இந்தியாவின் கடன் பொறுப்பு ... | 0 | 4 | 0 |
| **க. சந்தானம் எழுதிய** | | | |
| சத்திய சமாஜம் .... | 0 | 4 | 0 |
| **வ. வே. ஸு. அய்யர் எழுதிய** | | | |
| மங்கையர்க்கரசியின் காதல் கதைகள் .... | 0 | 8 | 0 |

சுதந்திரச் சங்கு புத்தகசாலை,

பைக்கிராப்ட்ஸ் ரோட், திருவல்லிக்கேணி, சென்னை.